சிவமயம்

# குமரகுருபரன்



மலர் 18] 1967-ஆம் சித்திரை-மீ 1ம் உ (14-4-67) [இதழ் 4

தனிப்பிரதி 25 நயா பைசா வருடச்சந்தா ரூ. 3-00

# ஆசிரியர் குழு



## உள்ளுறை

பக்கம்

# 8. வீரலக்ஷ்மீ

அஷ்ட பாஹுயுதாம் லக்ஷ்மீம் ஸிம்ஹாஸ நவரஸ்த்திதாம்!
தப்த காஞ்சன ஸங்காசாம் கிரீடமகு டோஜ்வலாம்
ஸ்வர்ணகஞ்சுக ஸம்யுக்தாம் சன்னவீர தராம் ததா!
அபயம் வரதம் சைவ புஜயோஸ் ஸவ்ய வாமயோ:!
சக்ரம், சூலம், ச, பாணம் ச சங்கம், சாபம், கபாலகம்!
ததீம் வீரலக்ஷ்மீம் ச நவதாலாத்மிகாம் பஜே!!

எட்டுக் கைகளோடு கூடிய லக்ஷ்மியும், உயர்ந்த சிம்மாஸநத்தில் அமர்ந்திருப்பவளும், உருக்கிய தங்கத்தை யொத்தவளும், மகுட கிரீடத்தோடு விளங்குபவளும், தங்கத்தினுலான சட்டையோடு கூடியவளும், சன்னவீரம் என்ற அணியைத் தரித்தவளும், இடது வலதாகிய கைகளில் அபயம், சக்ரம், சூலம், பாணம், வரதம் – சங்கு – வில், கபாலம், இவைகளைத் தரிப்பவளும் நவதாலம் என்ற அளவையுடையவளும் ஆகிய வீரலக்ஷ்மியைத் தியானம் செய்கிறேன்.

மாறுதல் குறிப்பு

1. உட்கார்ந்த உருவம்
2. இரண்டு பக்கத்திலும் சக்திகள்.

உ

சிவமயம்

திருச்செந்திலாண்டவன் துணை




மலர் 18 | பராபவஞு சித்திரைத் திங்கள் 1ம்வ [14-4-67] | இதழ் 4

# நீதிநெறி விளக்கம்

(கட்டுரை 9)

தொண்டைமண்டலாதீனம் மகாசந்நிதானம்

**சீலஸ்ரீ ஞானப்பிரகாச தேசிக சுவாமிகள் அவர்கள்**

ஸ்ரீ ஞானப்பிரகாச தேசிக சுவாமிகள் மடாலயம்,

காஞ்சிபுரம்.

வருந்தித்தாம் கற்றன ஓம்பாது மற்றும்
பரிந்துசில கற்பான் தொடங்கல் — கருந்தனம்
கைத்தலத்த உய்த்துச் சொரிந்திட் டரிப்பரித்தாங்
கெய்த்துப் பொருள்செய் திடல்.

'புதியவற்றைக் கற்றலினும் கற்றவற்றைப் பாது காத்தல் சிறந்ததென்பர். ஓம்பாது – சிந்தித்துத் தெளிந்து பாதுகாத்துக் கொள்ளாமல், பரிந்து – வருந்தி, கருந்தனம் –

பெரும்பொருள், கைத்தலத்தனவாகிய பெருந்தனத்தை. கருமை – பெருமை. உய்த்துச் சொரிந்திட்டு – மதியாமற் போக விட்டு விட்டு, அரிப்பரித்தல் – கடைவீதி முதலிய இடங்களில் உள்ள புழுதியை ஏதேனும் சிறுபொருள் கிடைப்பது கருதிப் பலநேரம் கொழித்தல். இதனைச் செய்வார் 'அரிப்பர்' என்று வழங்கப் படுவார். எய்த்து – வருந்தி, 'மேதையிற் சிறந்தன்று கற்றது மறவாமை' (முதுமொழிக்காஞ்சி. 3) 'படியில் கல்வி விரும்பி னேன் பாடம் போற்றுமது போல''. (பிரபுலிங்கலீலை) இது தமிழ்த் தெய்வத்தின் பதிப்பிலுள்ளது.

''ஒருவர் தாம் பல நாளாக வருந்திக் கற்ற நூல்களைப் பலமுறையும் நினைத்துப் பேணிக் கொள்ளாமல் விட்டு, வேறுஞ் சில நூல்களை வருந்திக் கற்கும்படி தொடங்குதல், கையில் உள்ள திரளான பெரும் பொன்னைக் கொண்டு போய் வீசிவிட்டு, (அககசாலையினின்றும் சிதறி) மண்ணோடு கலந்து கிடக்கும் பொற் பொடிகளை அரித்தெடுத்துப் பிரயாசப் பட்டுத் திரட்டிப் பெரும் பொனாக்க முயலுதலை யொக்கும்.'

''வருந்திக் கற்ற நூல்களை மறக்கவிட்டு வேறு நூல் கற்கப் புகுதல் மிக்கபேதைமை என்பது கருத்து. இதுபற்றியே இலக்கணக் கொத்து நூலாரும் 'வருவதிற் கருத்தினை மட்டுப் படுத்தி வந்ததிற் சிந்தையைச் சிந்தாதிறக்குக என்றார்.'' (சு. அ. கு. புலவர்.) அவ்வுரையில், ''அரிப்பு – மண்ணோடு கலந்து கிடக்கும் பொற்றூள். அரித்தெடுக்கப் படுதல் பற்றி அரிப்பெனப்பட்டது. சிறிது சிறிதாக அரித்துத் திரட்டுதல் பற்றி எய்துப் பொருள் செய்திடல் என்றார். ஆங்கு - அசை'' என்றும் எழுதினர் ஷி புலவர்.

புஷ்பரதசெட்டியார் உரைப்பதிப்புள் உள்ளவாறே எல்லா வுரையும் எழுதப்பட்டன எனல் அவற்றை நோக்குவார் அறிதல் கூடும். எல்லாரும், 'கருந்தனம் கைத்தலத்த' என்னுந் தொடரைக் 'கைத்தலத்த கருந்தனம்' எனமாற்றிப் பொருள் கொண்டனர். இது தமிழ் மரபாகாது.

சீவகசிந்தாமணியுரை (42)யில் உரையாசிரியர் நச்சினார்க் கினியர்,

"கவ்வையுங் கடும்புன லொலியுங் காப்பவர்
செவ்வனூ ருயிரம் சிலைக்கும் பம்பையும்
எவ்வெலாத் திசைகளும் ஈண்டிக் காரொடு
பவ்வம்நின் றியம்புவ தொத்த என்பவே."

என்புழி, கவ்வையும் புனலொலியும் சிலைக்கும் பம்பையும் என் றெண்ணியவாறே உரைக்காமல், காப்பவர் கவ்வை என்றியைத் துரைத்தார்.

'வேற்படை மாமயில் மேவுஞ் செய்யவேள்
காற்பது மந்தொழக் கருத்து முற்றுவித்
தேற்பவை யீந்தருள் இயல்பை யேத்துவார்
சேற்பகர் விழிநடைத் தெய்வப் பெண்டிரே'

என்னும் பிற்காலப் பாட்டிலே, செய்யவேள் வேற்படை என்றி யைக்கலாம், ஆயினும், 'செய்யவேள் காற்பதுமம்' என்றியை தலைத் தவிர்க்கலாகாது. சிந்தாமணியில், 'காப்பவர் சிலைக்கும் பம்பையும்', என்பதைக் காட்டாமல், காப்பவர் கவ்வை என்றி யைத் துரைத்தது தமிழ்மரபன்று. வேல்முருகன் என்றிருப் பதை முருகன் வேல் என்று மாற்றி ஆறன்றொகைப் படுத்து வது தக்கதோ? காப்பவர் கவ்வை என்பது கவியின் கருத்தும் அன்று. காப்பவர் சிலைக்கும் பம்பையே கவி கருதியது. இங் ஙனமே பெயரெச்சத்திலும் மரபு பிறழ்ந்தது அவ்வுரை. அதுவே ஈண்டைக்கு வேண்டுவது.

"தேங்காதமள்ளர் திரள்தோளினை சிக்கயாத்த
பூங்கச்சு நீக்கிப் பொறிமாண்கலம் நல்ல சேர்த்தி
நீங்காத காதலுடையாய் நினைக்கென்று பின்னும்
பாங்காய விஞ்சை பணித்தாங்கு விடுத்த வாறும்."

என்னுஞ் சிந்தாமணிப் பாடலினுரையில், பூங்கச்சுயாத்த தேங் காதமள்ளர் என்று இயைத்துப் பொருளுரைத்தார் நச்சினார்க் கினியர். இது தமிழ் மரபேயன்று. மள்ளர் யாத்த கச்சு எனலே மரபு. யாத்த என்னும் (பெயர்) எச்சம் மள்ளர் என்னும் பெயரைத் தழுவியதன்று. யாத்த கச்சு என்றலே மரபு. புலி தின்ற ஊன் என்பதை ஊன் தின்ற புலி என மாற்றின் முன்ன தில் முக்கியமாயிருந்த ஊன் அமுக்கியமாக, அமுக்கியமாக இருந்த புலி முக்கியமாய் விடும். விடவே ஊனின் விசேடம்

ஆக இருந்த நிலை மாறிப் புலியின் விசேடமாய் விட்டதாம். இவ்வாறே மள்ளர் யாத்த கச்சு என்பதைக் கச்சு யாத்த மள்ளர் என மாற்றின், முக்கியமும் விசேடணமும், அமுக்கியமும், விசேடியமும் முன் பின்னுய்க் கருத்து வேறுபாடு தோற்றும். எக்காலத்தும் பெயரெச்சத்தை மாற்றலாகாது, இந்நீதிநெறி விளக்கத்திலே கைத்தலத்த கருந்தனம் என மாற்றிப் பொருள் கொள்ளின், அது பெயரெச்சமாயின், கைத்தலத்த கருந்தனம் என்றே ஆசிரியர் குமரகுருபரமுனிவரர் பாடியருளவல்லரல் லரோ? பெயரெச்சம் தான் கொள்ளும் பெயரைத் தனக்கு(க்கால) முன்னுகக் கொள்ளவில்லை. கொள்ளின் தன் பொருளைப்பயவாது 'கருந்தனம் கைதலத்த' என்று பாடியது செய்யுளமைப்பிற்கு, பொருளமைதிக்கு அதை மாற்றிக் கொள்ளலே நன்று எனலாம். ஆயினும், இலக்கண மரபு வழுப்படப் பொருள் கோடல் எவ் வாற்ருலும் தக்கது அன்று. அச் சிந்தாமணிப்பாட்டில், சீவ கன் கட்டுற்ருனில்லை எனக்குறித்தல் வேண்டி, உரையாசிரியர் அவ்வாறு மரபு வழுப்படச் சொல்வகை செய்தார். அதனை அப்பாடலின் விசேடத்தும் 1149 ஆவது பாடலின் உரை முற் குறிப்பினும் முறையே, 'கட்டில்லாமை பின்னே உணர்க' என் றும் 'சிறையெனவே கட்டில்லாமையுணர்க' என்றும் நச்சினுர்க் கினியர் எழுதியிருப்பனவற்ருலும், பதிப்பாசிரியர் குறிப்புரை யிலும் உணரலாம்.

"நிலவுறழ் பூணினுனை நெடுநகர் இரங்கக் கையாத்து
அலபல செய்து கொல்வான் அருளிலான் கொண்ட போழ்தில்
குலவிய புகழினுனைக் கொண்டுபோம் இயக்கன் அஞ்சல்
சிலபகல் கழிந்துகாண்டி சிந்தியேதென்று சொன்னுன்:"

என்னும் (1131) பாடலை இங்கு நோக்கின், 'சிக்கயாத்த பூங் கச்சு' என்ற தன் கருத்துப் புலப்படும் படவே அதன் உரை யிற் கொண்ட சொல்வகை பொருந்தாமை உறுதியாகும். ஆகவே, அவ்வாறே இந்நீதிநெறிவிளக்கத்திலும் 'கருந்தனம் கைத்தலத்த' என்பதைக் கைத்தலத்த கருந்தனம் என மாற்றிப் பெயரெச்சப் பொருளுரைத்தல் தமிழிலக்கண மரபுக்கு ஒவ்வாத தாகும்.

இங்கு மற்ருென்றும் காட்டுகின்ருேம். உரிய இடத்தில்

இருக்குஞ் சொற்களை அதனின் வேறிடத்திலுய்த்துக் கொள்ளும் பொருள் சிறந்ததாயிருப்பினும், உள்ளவாறு கொண்டுரைக்கும் பொருளே சாலச் சிறந்ததாய், அதனைப் பாடிய ஆசிரியர் உள்ளக் கிடக்கையைத் தெளிவிப்பதாகும்.

திருத்தக்கதேவர், "பிடியொடு நின்ற வேழம் பெருவளைப் புண்டவண்ணம் வடிமலர்க் கோதையோடும் வளைத்தலின் மைந்தன் சீறி" என்ற இடத்தில், நச்சினார்க்கினியர் சொன்மாற்றிக் கொண்ட பொருள் தமிழ்மரபழித்ததாயிற்று. பிடியொடு நின்ற பெருவேழம் குணமாலையொடு கூடிய சீவகனுக்கு உவமை. வடிமலர்க்கோதை – குணமாலை, மைந்தன் – சீவகன், பெருவளைப்பு – வேழத்தைப்பிடிப்போர், செய்த – செய்யும் பெரிய வளைப்பு. சிறுவளைப்பால் வேழத்தை அகப்படுத்தல் இயலுமோ தனிவேழமும் அன்று. பிடியொடு நின்று வேழம் பிடியுங் களிறுமாம் இரண்டனையும் அடக்கித் தம்மகப்படுத்த முயலும் எவரும் ஒரு பெருவளைப் பாலன்றிச் சிறுவளைப்பாற் கருத்தை நிறைவேற்றல் ஒல்லாது. அவற்றால் தாம் மாய்தலும் நேரும். அஞ்சாது பிடியொடு கூடிய களிற்றினருகிற் செல்லுதலும் அரிதே. பெருவளைப்பால் அவ்வேழத்தையும் அப்பிடியையும் அஞ்சுவித்தே அருகிற் செல்லற்குரியர் யாவரும். உவமேயத்திலும் சீவகனைப் பற்ற முயலும் மள்ளரும் சிறுவளைப்பாற் பற்றலியலாது. பெருவளைப்புச் செய்தே பற்ற முயல்வர். 'மைந்தன் சீறிவிடுகணை சிலையோ டேந்திவெருவரத் தோன்றலோடும் அடுபுலிகண்டமான்போல் ஆறலவாயினாரே' என்றார் தேவர். அதனால் பெருவளைப்புச் செய்யும் வீரரும் வெருவந்து ஓடச் சீவகன் தோன்றியவாறும், கொல்புலியைக் கண்ட புல்வாய் மான்போல், வழியல்லா வழியில் ஓடியவாறும் வெளிப்பட்டன. படவே வளைப்புப் பெரிது ஆதலும், அப்பெருவளைப்பு, சீவகவேழத்திற்கு இன்றியமையாததாய் மள்ளர்க்கு வேண்டுவதாலும், சிறுவளைப்புச் செய்யின், பிடியொடுநின்ற வேழத்தாற் கொலையுண்பராதலும் நேரும் எனல் தெளிவு. இவ்வுண்மையை நோக்கின், திருத்தக்க தேவர். 'பிடியொடு நின்ற வேழம் பெருவளைப்புண்ட வண்ணம்' என்று பாடியது பொருத்தமாதல் நன்கு புலப்படும். அதனை நச்சினார்க்கினியர், வளைப்பு என்றதற்குற்ற 'பெருமை'யாகிய அடையை வேழத்திற் குற்ற அடையெனத்

கொண்டு பெருவேழம் வளைப்புண்டவண்ணம் என மாற்றிப் 'பெருவேழம் வளைப்புண்டாற் போல' என்றுரைத்தார். 'பெரு வளைப்பு' என்பது பண்புத்தொகை. அதிலுள்ள பெருமை என்னும் பண்பு குறித்த சொல் 'பெரு' என்னும் முதனிலை. அதனை வேழம் என்பதனொடுகூட்டிப் பொருளுரைப்பது விதி விரோத மும், மரபுவழுவுமாகும். விதி விரோதமாவது:— "உயர்திணை அஃறிணை ஆயிரு மருங்கின் ஐம்பாலறியும் பண்புதொகுமொழி யும்......மருவின் பாத்திய; புணரியல் நிலையிடை யுணரத் தோன்று", என்றார் தொல்காப்பியனார். (எழுத்து. 482) அதன் உரையில் நச்சினார்க்கினியர் "உயர்திணை அஃறிணை யென்னும் அவ்விரண்டிடத்தும் உளவாகிய ஒருவன் ஒருத்தி பலர் ஒன்று பல என்னும் ஐந்து பாலினையும் அறிதற்குக் காரணமாகிய பண்பு கொள் பெயர் தொகுத் தொகைச் சொல்லும்......... .........ஒன்றனோடொன்று புணருதல் நடந்த தன்மையிடம் விளங்கத் தோன்று! வெற்றிலை.........அன்ன. இங்ஙனம் ஐம்பாலுந் தொகுத்தற்குரிய முதனிலையாதலிற் புணர்த்தலாகாமை கூறினார்" என்றுரையிட்டார். அவரே ஈண்டுப் பண்பைப் பிரித்ததும் வேறொருபெயரொடு புணர்த்ததும் விதிவிரோதமே ஆம், அவிரோதம் ஆகாது கருந்தனமாகிய கைத்தலத்தன எனக்கொண்டுரைத்தலே மரபு. எய்த்து, வருந்தி என்னும் சொல் முதலியவற்றிற்குரிய சிற்சில கருத்துக்களை எழுத வேண்டும். விரிவஞ்சியும் பிறவஞ்சியும் இவ்வளவிற்போது மென்றமைகின்றேம்.

---

(தொடரும்)



# கரும்பும் தேனும்

சி. அ.

இனிய பொருள்களில் கரும்பு முதலாகச் சொல்லப்படும். 'கரும்பு தின்னக் கூலி வேண்டுமா?' என்பது பழமொழி. 'கனியிருப்பக் காய்கவர்தல்' என்பதுபோல, 'கரும்பிருக்க இரும்பு கடித்தல்' என்பதும் ஒரு பழமொழி இவ் இருபழ மொழிகளையுமே திருநாவுக்கரசர் தம் திருவாரூர்ப் பழமொழித் திருப்பதிகத்துள் எடுத்தருளிச் செய்கின்றார்.

மெய்யெலாம் வெண்ணீறு சண்ணித்த மேனியான்
தாள்தொ ழாதே
உய்யலாம் என்றெண்ணி உறிதூக்கி உழிதந்தென்
உள்ளம் விட்டுக்
கொய்யுலாம் மலர்ச்சோலைக் குயில்கூவ மயில்ஆலும்
ஆரூ ரரைக்
கையினால் தொழாதொழிந்து கனியிருக்கக் காய்கவர்ந்த
கள்வ னேனே.

மறுத்தான்ஓர் வல்லரக்கன் ஈரைந்து முடியினொடு
தோளும் தாளும்
இறுத்தானை எழில்முளரித் தவிசின்மிசை யிருந்தான் றன்
தலையில் ஒன்றை
அறுத்தானை ஆரூரில் அம்மானை ஆலாலம்
உண்டு கண்டம்
கறுத்தானைக் கருதாதே கரும்பிருக்க இரும்புகடித்து
எய்த்த வாறே.

கரும்பிற்கு அடுத்தபடி தேனைக் குறிப்பதும் வழக்கம். கண்ணகியைப் புதுமணம் செய்துகொண்ட கோவலன், காதல்

---

இக்கட்டுரை 'ஞானசம்பந்தம்' ஆசிரியர் அனுமதி பெற்று பிரசுரிக்கப்படுகிறது.

மிகுதியால் அவனைக் காசறு விரையே "கரும்பே தேனே" என்று பராட்டியதாக இளங்கோவடிகள் கூறுகின்றார். 'கரும் பிருந்த கட்டிதனைக் கனியைத் தேனை" என்பது, இறைவனைப் பற்றி அப்பர் குறிப்பிடும் அரிய தொடர்.

கரும்பும் தேனும் இனிமையைத் தருவனவாயினும், கரும் பில் கோது உண்டு; தேனில் கோது இல்லை. தேன் முழுவதுமே சுவையாக நுகரத்தக்க பொருள். இந்த ஒரு நுட்பத்தைக் கொண்டு திருமூலர் ஓர் அரிய கருத்தை வெளியிடுகிறார்.

கரும்பும் தேனும் கலந்ததோர் காயத்தில்
அரும்பும் கந்தமும் ஆகிய ஆனந்தம்
விரும்பியே உள்ளம் வெளியுறக் கண்டபின்
கரும்பும் கைத்தது; தேனும் புளித்ததே.

காயம் - உடம்பு. நமது உடம்பில் கரும்பும், தேனும் கலந்திருக்கின்றனவாம். கரும்பு எது? தேன் எது? கரும்பு உயிர்; தேன் சிவம்; ஏன்? கரும்பும் தேனும் இனிமையுடைய பொருள்கள். அதுபோல ஆன்மாவும், சிவமும் அறிவுடைய பொருள்கள். கரும்பு இனிமையுடையதாயினும் சுவையற்ற கோதும் உடையதாய் இருத்தல் போல, ஆன்மா அறிவுடைய தாயினும், அறியாமையும் உடையதாய் இருக்கின்றது. தேன் இனிமையே வடிவமாய் இருப்பது போல, சிவமும் அறிவே வடிவமாய் இலங்குகின்றது. இவை இரண்டும் அறிவற்ற உடம்பில் கலந்து நிற்கின்றன. இதுதான் வியப்பு.

கரும்புபோல அறியாமையை உடையதாகிய உயிர், அந்த அறியாமையினின்றும் நீங்கித் தேன் போல உள்ள, சிவமாக வேண்டும்; அப்பொழுதுதான் அதற்கு ஆனந்தம் வாய்க்கும்.

'ஆனந்தம்' எனப்படுகின்ற இன்பம், சிவத்தினுடையது. சிவம் தன்னுள்ளே கலந்திருப்பினும் ஆன்மா தனது அறியா மையால் அந்த ஆனந்தத்தை அறிந்து அனுபவிக்க இயலா திருக்கின்றது அதனால், ஆன்மாவினிடத்தே பொருந்தியுள்ள சிவானந்தம் அரும்பிலே பொருந்தியுள்ள மணம்போல வெளிப் படாது அடங்கியிருக்கின்றது. பக்குவம் அடையாத ஆன்மா அரும்பு போன்றது; அதனால், அதனுள்ளே சிவானந்தம் இருப்

பினும் அது வெளிப்பட்டுத் தோன்றுவதில்லை. பக்குவம் அடைந்த ஆன்மா மலர் போன்றது; அதனால், அதனுள்ளே சிவானந்தம் வெளிப்பட்டு விளங்கும்.

> "தன்பருவ மலருக்கு மணமுண்டு வண்டுண்டு
> தண்முகை தனக்குமுண்டோ!"

என்கிறார் தாயுமானவர். இதுவே "அரும்பும் கந்தமும் ஆகிய ஆனந்தம்" எனப்பட்டது.

அரும்பு நாளுக்கு நாள் முதிர்ந்து போதாகி மலர்வது போல ஆன்மாவும் நாளுக்கு நாள் பக்குவம் எய்தி அறிவு பெற்று விளங்கும். அப்பொழுது, மலரில் மணம்போலச் சிவானந்தம் வெளிப்பட்டு விளங்கும்.

> "பூவினிற் கந்தம் பொருந்திய வாறுபோல்
> சீவனுக் குள்ளே சிவமணம் பூத்தது"

என்று திருமூலரே மற்றோரிடத்தில் அருளிச் செய்கின்றார்.

அரும்பில் அடங்கியிருந்த மணம் மலரில் வெளிப்படுவது போல, ஆன்மாவில் அடங்கியுள்ள சிவானந்தம் பக்குவகாலத்தில் வெளிப்படும்பொழுது ஆன்மாவுக்கு மற்றைய இன்பங்களெல்லாம் இன்பமாய்த் தோன்றாமையால், அவைகளில் விருப்பஞ் செல்லா தொழியும்; சிவானந்தம் ஒன்றையே அது விரும்பி அனுபவித்திருக்கும் என்பதை,

> "விரும்பியே உள்ளம் வெளியுறக் கண்டபின்
> கரும்பும் கைத்தது; தேனும் புளித்ததே"

என்று நயம்பட இத்திருமந்திரத்துள், அருளியுள்ளார். இவ்வாறே அருணகிரிநாதரும் தம் கந்தர் அலங்காரத்துள்,

> "பெரும்பைம் புனத்தினுட் சிற்றேனல் காக்கின்ற
> பேதைகொங்கை
> விரும்பும் குமரனை மெய்யன்பி னால்மெல்ல
> மெல்லஉள்க
> அரும்புந் தனிப்பர மானந்தம் தித்தித்
> தறிந்தஅன்றே
> கரும்பும் துவர்த்துச்செந் தேனும் புளித்தறக்
> கைத்ததுவே"

என்று கூறுவதைக் காண்கின்றோம். இவ்வாறு கரும்பும் தேனும் கலந்து வரும் திருபாடல்கள் நம் உள்ளம் புகுந்து இனிக்கும் இன்ப ஊற்றுக்கள் அல்லவோ!

---

# திருமந்திரம் TIRUMANTIRAM

## ஐந்தாம் தந்திரம் Tantra the Fifth

டாக்டர், திரு. பா. நடராசன் அவர்கள் M. A., D. Litt.,

---

மலர் 18, இதழ் 3-ன் தொடர்ச்சி

### The Siva Path is the proven Path
### சிவநெறியே அடைந்தவர் கண்டநெறி

145. தேர்ந்த அரனை அடைந்த சிவநெறி
பேர்ந்தவர் உன்னிப் பெயர்ந்த பெருவழி
ஆர்ந்தவர் அண்டத்துப்புக்க அருள்நெறி
போந்து புனைந்து புணர் நெறி யாமே.

The Path of Siva is the proven path
It led them to Hara;
It is the royal path that renowned Souls had walked;
The Path Divine
That took the devout to the Cosmic Space;
-That path, do thou seek, enter and persevere.

சிவநெறியே சிறந்த நெறி; அதனாலேயே அரனை அடைந்தனர்; முத்தி பெற்ற பெரியோரெல்லாம் அவ்வழியிலேதான் சென்றுள்ளனர்; பக்தி மிகுந்தோரெல்லாம் பரவெளியிற் கலந்தது அந்நெறி நின்றே. தேடி, புகழ்ந்து, தழுவவேண்டிய நெறியாகுமது.

---

(தொடரும்)

# முத்துக்குமார சுவாமி பிள்ளைத்தமிழ்

## உரை நடை

பாலகவி வயிநாகரம்,
திரு. வே. இராமநாதன் செட்டியார் அவர்கள்,
தேவகோட்டை.

(மலர் 18. இதழ் 3-ன் தொடர்ச்சி)

வழிக்குப் புறம்பா யாமிழைத்த
வண்டன் மனையவ் வசுரேசன்
வான்கூட் டுண்பா னடுக்கடலில்
வகுத்த நகரன் றிகழாமே
கொழிக்குஞ் சிறுமுற் றிலில்வாரிக்
கொடுவந் தடியே மனைமுன்றிற்
குவியா நின்ற மணிக்குவையக்
குருகு பெயர்க்குன் றமுமன்றால்
சுழிக்குண் டகழி வாய்மடுப்பச்
சுடர்வால் வளைத்தெண் டிரைக்கரத்தால்
சுரபி சொரிபான் மடையடைத்த
சோற்றி னேடுங் கலந்தூட்டிச்
செழிக்குந் தடக்கா விரிநாடா
சிறியேஞ் சிற்றில் சிதையேலே
செந்நெற் பழனப் புள்ளூரா
சிறியேஞ் சிற்றில் சிதையேலே. 74

வீதியில் நடைவழிக்குப் புறம்பாக நாங்கள் கட்டிய இவ் விளையாட்டு வீடு, அந்த அசுரர் தலைவனாகிய சூரபன்மன் தேவ லோகத்தைக் கொள்ளை யடிப்பதற்காக நடுக்கடலில் அமைத்த வீரமகேந்திர நகரமன்று. மற்றவர்கள் இகழாமல் கொழிக்கின்ற சிறிய சுளகுகளில் வாரிக்கொண்டு வந்து அடியேங்களது வீட்டு முற்றத்தில் குவித்த மணித்தொகுதி அந்தக் கிரவுஞ்ச கிரியன்று. சுழியையுடைய ஆழமாகிய கடல் உண்ணும்படி ஒள்ளிய வெள்ளிய சங்குகளை வீசும் அலையாகிய

கையினால் காமதேனு சொரிந்த பாலை மடையடைத்த சோற்ருேடு கலந்து ஊட்டிச் செழிக்கின்ற பரந்த காவிரி நாடனே! சிறியேங்களது சிற்றிலைச் சிதையாதிருப்பாயாக. செந்நெல்கள் நிறைந்த வயல்களையுடைய புள்ளூரனே! சிறியேங்களது சிற்றிலைச் சிதையாதிருப்பாயாக.

முரிக் களிருே மழவிடையோ
முடுகிற் றெனப்பார்த் துழியுனது
முகத்தி னழகெம் வடிக்கண்ணுல்
மொண்டுண் டனம்யா மெனவுமிகப்
பாரித் தோங்கிப் பூரித்த
பைம்பொற் புயத்தைக் கண்ணேறு
பட்டே மெனவு மடிகள்பகை
பாராட் டுவதோர் பண்பன்ருல்
வேரிக் கொழுந்தாற் றிளம்பாளை
விரிபூங் கமுகும் பால்பாயும்
வேழக் கரும்பு மிருட்பிழம்பை
விழுங்கிக் கக்குஞ் சுடர்ப்பருதித்
தேருக் கெழில்செய் சோணுடா
சிறியேஞ் சிற்றில் சிதையேலே
செந்நெற் பழனப் புள்ளூரா
சிறியேஞ் சிற்றில் சிதையேலே. 75

வலிமையையுடைய ஆண் யானையோ அல்லது இளமையான ஆனேருே வேகமாக வந்துள்ளதென்று நாங்கள் உன்னைப் பார்த்தபோது உனது திருமுகத்தின் அழகை எங்களது கூரிய விழிகளினுல் மொண்டு பருகினேமெனவும், மிகப்பருத்து உயர்ந்து பூரித்த பசிய அழகிய உனது தோள்களைப் பார்த்துக் கண்ணேறு உண்டாகும்படி செய்தோமெனவும் அடிகளே! எங்களிடத்துப் பகைமை பாராட்டுவது உமக்கு ஏற்றதாகாது. நறுமணத்தை யுடைய கொழுவிய இளம்பாளைத் தாறுகளை விரிக்கின்ற அழகிய கமுகு மரங்களும் பாலைச் சொரிகின்ற இரசதாளிக் கரும்புகளும் வளர்ந்து வானத்திற் சென்று, இருட்கற்றையை விழுங்கி ஒளியை வெளிப்படுத்துகின்ற கதிரவனது தேருக்கு அழகுசெய்யும் சோழ நாட்டை யுடையவனே! சிறி

யேங்களது சிற்றிலைச் சிதையாதிருப்பாயாக. செந்நெல் நிறைந்த வயல்களை யுடைய புள்ளூரனே! சிறியேங்களது சிற்றிலைச் சிதையாதிருப்பாயாக.

பொன்னங் கொடிபோ னுடங்குமிடைப்
புத்தேண் மகளிர் விளையாடப்
புனைமா ளிகையுஞ் சூளிகையும்
புதுக்கிக் கொடுத்தாய் பொதுஞானம்
மெய்ந்நின் றவருள் விழிப்பாவை
விளையாட் டயர வழியாத
வீடுங் கொடுத்தா யெம்மனையும்
விடுத்துச் சென்றுன் மிகையுண்டோ
பின்னுந் திரைத்தீம் புனற்கங்கை
பேராற் றூற்று நறைக்கோட்டுப்
பெருங்கற் பகத்தின் கழுத்தொடியப்
பிறழும் வாளைப் பகடுதைத்த
தென்னம் பழம்வீழ் சோணாடா
சிறியேஞ் சிற்றில் சிதையேலே
செந்நெற் பழனப் புள்ளூரா
சிறியேஞ் சிற்றில் சிதையேலே. 76

அழகிய பொற்கொடியைப் போன்று அசைகின்ற இடையை யுடைய தேவமாதர்கள் விளையாடுவதற்கு அலங்கரிக்கப்பெற்ற மாளிகைகளையும், உச்சி மாடங்களையும் புதியனவாக்கிக் கொடுத்தாய். அபர ஞானத்தின் வழிவந்த பரஞானம் பெற்று நின்றவர்கள், சிவஞான விழிகளில் விளங்கும் பாவைகளினால் சிவானந்தத்தை நுகாந்து இன்புறும்படி அவர்களுக்கு என்றும் அழியாத வீட்டைக் கொடுத்தாய். யாம் கட்டிய இந்தச் சிற்றில்களை அழிக்காது விட்டுச்சென்றால் அதனால் உனக்குக் குறையுண்டாகுமோ? ஒன்றோடொன்று பின்னுகின்ற அலைகளை யுடைய இனிய நீர் நிறைந்த கங்கைப் பேராற்றில் தேனை ஊற்றுகின்ற கிளைகளையுடைய பெரிய கற்பக மரத்தின் கழுத்து ஒடிந்து விழும்படி தாவுகின்ற ஆண்வாளை மீன்கள் உதைத்ததனால் உதிர்ந்த தென்னம்பழங்கள் விழ்கின்ற சோழநாட்டையுடையவனே! சிறியேங்களது சிற்றிலைச் சிதையா திருப்பாயாக. செந்நெல் நிறைந்த வயல்களையுடைய புள்ளூரனே! சிறியேங்களது

சிற்றிலைச் சிதையா திருப்பாயாக.

கானக் குறப்பெண் குடியிருந்த
கன்னிப் புனத்துத் தினைமாவும்
கமழ்தேன் றெளிவு முண்டுசுவை
கண்டா யென்றே மதுவல்லால்
மீனத் தடங்க ணவண் மிச்சில்
மிசைந்திட் டதுவு நசைமிக்கு
விரைத்தீங் குமுதத் தமுதடிகள்
விருந்தா டியதும் விண்டோமோ
கூனற் பிறையின் கோடுரிஞ்சும்
கொடிமா டத்து வெயில்விரிக்கும்
குருமா மணியாற் சுரநதியிற்
கொழுந்தா மரைகண் முறுக்குடைந்து
தேனக் கலருஞ் சோணாடா
சிறியேஞ் சிற்றில் சிதையேலே
செந்நெற் பழனப் புள்ளூரா
சிறியேஞ் சிற்றில் சிதையேலே. 77

காட்டிலே வாழுகின்ற குறவர்களது கன்னிப் பெண்ணாகிய வள்ளிநாயகி வந்து தங்கியிருந்த தினைப்புனத்தில், அவள் தந்த தினைமாவையும் மணமுள்ள தேன் தெளிவையும் உண்டு சுவை கண்டாயென்று நாங்கள் சொன்னோமேயல்லாமல் மீன்போன்ற அகன்ற கண்களையுடைய அவள் உண்டு தந்த மிச்சத்தை நீ உண்டதையும் விருப்பம் மிகுந்து நறுமணமுள்ள இனிய குமுதம் போன்ற வாயமுதத்தை அடிகள், புதுவதாகப் பருகியதையும் நாங்கள் யாரிடமாவது சொன்னோமா? வளைந்த பிறைத் திங்களின் முனையை உரிஞ்சித் தேய்க்கின்ற கொடிகளையுடைய மேல்மாடங்களில் பதிக்கப்பெற்றுள்ள ஒளி வீசுகின்ற உயர்ந்த பெரிய இரத்தினங்களால், ஆகாய கங்கையிலுள்ள கொழுவிய தாமரைகள் கட்டவிழ்ந்து தேனைச் சொரிந்து மலருகின்ற சோழ நாட்டையுடையவனே! சிறியேங்களது சிற்றிலைச் சிதையாதிருப்பாயாக. செந்நெல் நிறைந்த வயல்களையுடைய புள்ளூரனே! சிறியேங்களது சிற்றிலைச் சிதையாதிருப்பாயாக.

---

(தொடரும்)

# தமிழ்ப் புத்திலக்கியப் போக்கு

திரு. பொ. மாணிக்கவாசகம் அவர்கள்,
திருச்சி.

இலக்கியம் ஒரு ஜனநாயகம். பொருளிலிருந்து எழும் உணர்ச்சி வெள்ளம். சொற்களாகிய இலக்கியக் கோயிலுக்கு அமைப்பு முக்கியமானது. தொடக்கத்திலே ஒவ்வொரு சொல்லும் வாக்கியமும் இறுதியைக் காணும்படி செய்தல் வேண்டும். எடுத்துக்கொண்ட கருத்தின் ஒலியை ஒவ்வொரு வரியிலும் உணரும்படி அமைத்தால் இலக்கியத்திற்கு அழகாகும். மனத்தில் நிகழ்கிற உணர்ச்சிகளைப் பொருத்தவை வாக்கியங்களும், சோகம் எழுந்தால் நடை சோகத்தைக் காட்டும்; அழகு உதயமானால் அவ்வழகு நடையில் விரியும்; களிப்பு நடையில் துள்ளி நடனம் புரியும்; சாந்தம் இன்னிசையில் கரைந்து காட்டும். ஆகவே இலக்கியம் மனித சிந்தனையில் அளவுகோல். ஒப்புக்கொள்ளப்பட்ட, விரும்பப்பட்ட அபிப்பிராயம் என்பதையும் கடந்து நின்று, புதுப்புது விஷயங்களையும் புரட்சிகரமான கருத்துக்களையும் படைக்கக்கூடியது.

கலை, மக்கள் அனைவருக்கும் உரிய பொதுச் சொத்து. அதை அனுபவித்துப் பயன் பெறுவதற்கு மக்களிடம் கலை உள்ளம் அதாவது ரசிக்கும் திறம் பெருகவேண்டும். மக்களின் பண்பட்ட ரசனையை வளர்த்தல் நாட்டில் முன்னேற்றத்துக்கு அறிகுறியாகும். இன்றைய தமிழ் நாட்டில் கலைத்துறை அனைத்திலும் மகிழத் தக்க மறுமலர்ச்சி செழித்து வருகிறது. கலைகளால் சமுதாயத்தில் ஏற்படும் பயன் நிரந்தரமானது. அக உலகையும் புற உலகையும் ஒருங்கே திருத்தி அமைக்கும் வல்லமை கலைகளுக்கு உண்டு. கலையால் உளம் பண்படும், உளம் பண்பட்டால் செயல் சிறந்து விளங்கும். அப்பொழுது உலகம் சகல துறைகளிலும் கொடுமைகள் அகன்று மனிதன்

வாழ்வதற்குகந்த இன்பப் பூஞ்சோலையாக மாறிவிடும்.

'தாமின் புறுவதுலகின் புறக்கண்டு
காமுறுவர் கற்றறிந் தார்'

என்னும் குறளை நோக்குக.

தமிழில் புத்திலக்கியப் போக்கு, விமர்சனத்தில் புகுந்துள்ளது. ஆங்கில நூல்ப் புலமையோடும் தமிழில் இறங்கிய சிலர் புதுப்புது வழிகளில் தமிழை வளர்க்கின்றுர்கள். மேனுட்டு பாணிகளைக் கையாண்டும், தமிழ் நூற்களை விமர்சனம் செய்யும் வழக்கத்தையும் மேற்கொண்டுள்ளார்கள். பக்கம் பக்கமாக சினிமா விமர்சனங்களுக்கு இடம் கொடுக்கும் நம் ஆசிரியர்கள் புத்தக விமர்சனங்களுக்குத் தனிச் சலுகை காட்ட வேண்டும். மேனுட்டில் புத்தக விமர்சனம் ஒரு தனிக் கலையாக வளர்ந்து வருவது போல் தமிழிலும் அம்மாதிரி வருதல் வேண்டும். இன்று புத்தக மார்க்கட்டில் எவ்வளவோ புத்தகங்கள் மலையாகக் குவிகின்றன. தமிழ் வளரத்தான் செய்கிறது. ஆனுல் எந்த மாதிரி வளர்கிறது என்பதைச் சொல்லும் விமர்சகர்கள் இருந்தாலன்றி படிப்பவர்கள் புத்தகங்களை நாடி வருவது அபூர்வம். பலதிறப்பட்ட நூல்களில் எந்த நூலை வாங்குவது என்பதை வாசகர்களுக்கு வழிகாட்ட வேண்டும். எல்லாவற்றையும் புகழ்வதையோ இகழ்வதையோ விட்டு, நூலின் தாரதம்மியத்தைச் சீர்தூக்கி, அதற்குரிய மதிப்பைச் செலுத்தும் விமர்சகர்கள் முன் வர வேண்டும். தமிழில் ஒரு தனி விமர்சனப் பத்திரிகையும் வேண்டும். அந்தந்த மாதம் வெளிவரும் நூல்களைப் பற்றி அந்தந்தத் துறையில் கைதேர்ந்த பாரபட்சமற்ற விமர்சகர்களைக்கொண்டு மதிப்புரைகள் எழுதி அதைப் புத்தக வடிவமாக வெளியிடவேண்டும். இப்பொது பத்திரிகைகளில் வரும் மதிப்புரைகள் சந்தையில் விற்பனைக்காக வேண்டிய குறிப்புகள் தான் காணப்படுகின்றன. நூல் மதிப்புரை வெறும் விமர்ச்சனமாக மட்டும் இல்லாமல், எடுத்துக்கொண்ட புத்தகத்துக்கு மறுப்பாகவே எழுந்ததற்கு உதாரணம், சமீபத்தில் வெளியான 'கம்பரச ஆராய்ச்சி'. இதன் ஆசிரியர் ஸ்ரீ பாலசுந்தர முதலியார்; திரு. ஸி. என். அண்ணுத்துரை எழுதிய கம்பரசம் என்ற நூலுக்கு இது மறுப்பு. இதன் ஆராய்ச்சி எல்லாம்

இந்த நூலிலேயே அங்கங்கே கம்பரசத்திலிருந்து பல வாக்கியங்கள் எடுத்துக் கொடுக்கப் பட்டுள்ளன. கவிதையில், தமிழ்ப் பாஷையில் கம்பராமாயணத்துக்கு மேலான கவிதை இல்லை எனப் போற்றப் பட்டிருக்கிறது. அத்தகைய ஒரு மகா காவியத்தில் ஒருவர் ஆபாசக் காமரசத்தைத் தான் காண முடிந்த தென்றால் அது அந்த மகா காவியத்தின் குற்றமல்ல என்பது தெளிவு. கம்பனில்லாமல் தமிழுமில்லை, தமிழ் நாடுமில்லை. ஆசிரியர் கம்பரசத்திற்குப் பதில் சொல்லும் வாயிலாகக் கம்பன் கவிதா மேதையைத் திறம்பட எடுத்துக் காட்டியிருக்கிறார். கம்ப நாடகம், கம்பசிருட்டி, கம்பசித்தம், கம்ப சூத்திரம் என்ற அடைமொழிகளுக்குரியனவான கம்பன் செய்யுட்களை எடுத்துக்காட்டி, கம்ப ராமாயணத்தில் ஒருவர் காணும் ஆபாசம் அதைக் காண்பவர் உள்ளத்தில் தான் இருக்கிறதே ஒழிய கம்பன் கவிதையில் அல்ல என்று சந்தேகத்திற்கிடமின்றி விளக்கியிருக்கிறார். ஆசிரியரின் தமிழ்நடை நேருக்கு நேர் பேசுவதுபோல இருக்கிறது. கம்பன் கவியின்பத்தை அனுபவிக்க விரும்புகிறவர்களுக்கு இந்த நூல் ஒரு ஆரம்ப வழி காட்டியாகவும் அமைந்துள்ளது. சமீபத்தில் வெளியான ஆராய்ச்சி நூல்களில் வேறு சில; வள்ளுவர் கொள்கையும் வடவர் கொள்கையும், திருக்குறள் ஆராய்ச்சி, வள்ளுவர் காமம், தெய்வபுலவர் திருவள்ளுவா; பெரும்பாணாற்றுப் படை ஆராய்ச்சியும் உரையும் என்பன.

தமிழ் நடையில் எளிமை, தெளிவு, லாவகம், வேகம் முதலியவை இருக்க வேண்டும். எல்லோருக்கும் விளங்க வேண்டிய வகையில் எழுதினால் அழகு ஏற்படும். பிறரெல்லாம் படித்துணர்ந்து கொள்ளத் தக்க தெளிவான நடையில் எழுதுவதே யாவரும் விரும்பத் தக்கது. தமிழை இன்று வழக்கத்திலுள்ள பேச்சு முறையிலே எழுதப் பலர் முன் வருதல் வேண்டும். பேச்சு முறை என்பது பேச்சு நடையில் அனாவசியமான வார்த்தை அலங்காரமில்லாமல் கொச்சையை விலக்கி விஷயத்தைத் தெளிவாக்கும் முறையில் வார்த்தைகளின் வலு, ஸ்தானம், அர்த்தம் இவற்றை உணர்ந்து எழுதவேண்டும். சந்தி சேர்த்து எழுதுதலே தமிழ் இலக்கண மரபாயினும் வசன நடையில் அவ்வாறு எழுதவேண்டிய நியமமில்லை. ஆதலின கடின சந்திகளை

எப்போதும் பிரித்தெழுதல் வேண்டும். ஆங்கிலப் பாஷையில் காணப்படுகின்ற 'குறியீட்டிலக்கணம்' தமிழின்கண் முழுவதுந் தழுவிக்கொள்ளப் படல்வேண்டும். அதனுல் பொருள் தெளிவும், விரைவு உணர்ச்சியும் உண்டாகின்றன. இதுகாரணமாக படித்தவனுக்கும் படித்த நூலின் கண் ஆர்வம் உண்டாகின்றது. தமிழ்ச் சொற்கள் ஆங்கில பாஷையில் புகுதலும், ஆங்கிலச் சொற்கள் தமிழ்ப் பாஷையிற் புகுதலும் இயற்கையே. இதனைத் தடுக்க முடியாது.

'பழையன கழிதலும் புதியன புகுதலும்
வழுவல காலவகையினுனே'

என்பது அனுபவ வாக்கல்லவா? பாஷையை நாம் வசனம், பாடல், பேச்சு என்று பிரித்து வைத்திருக்கிறோம்.

இயல் இசை நாடகம்

இதில் எந்தப் பிரிவில் பாஷையில் ஜீவனைக் காப்பாற்றி வலுவேற்றுகிறோமோ அதைப் பொறுத்துத்தான் கலையம்சம் விளங்கும். பல தினசரி, வாரப்பத்திரிகைகளும், மாத வெளியீடுகளும் தமிழர்களிடையே ஊக்கத்தையும் தமிழில் ஆர்வத்தையும் உண்டாக்கிவிட்டன. சுதந்திரம் அடைந்துவிட்ட நம் நாட்டில் வருங்காலத்தில் பத்திரிகை முன்னிலும் வேகமாக பெருகும் என்பதற்குச் சந்தேகமில்லை. தேசியம், நல்லொழுக்கம், நீதி, தெய்வபக்தி முதலியவற்றை அடிப்படையாகக் கொண்டு கட்டுரைகள் பல நல்லமுறையில் வெளிவருகின்றன.

தமிழ்நாட்டில் இன்று சிறுகதைகள்தான் பத்திரிகைகளின் பெரும்பகுதியை அலங்கரிக்கின்றன. தமிழர் சமூகம் இன்று கதைகளையே மிகவும் விரும்பி ரசிப்பதால் இன்றைய எழுத்தாளர்களுக்கும் சிறுகதையில் மோகம் பிறந்தது. இதன் விளைவாக தமிழ்நாட்டில் வாரம் ஒன்றுக்கு இருநூற்றுக்கு மேற்பட்ட சிறுகதைகள் வெளியாகின்றன, என மதிப்பிடப்படுகிறது. இன்று வெளிவரும் கதைகள் காதல் ரசத்தை அதாவது சிருங்கார ரசத்தையே பிரதானமாகக்கொண்டவை என்று சொன்னுல் அதில் தப்பு ஒன்றுமில்லை. தற்காலத்தில் தமிழ் எழுத்தாளர்களுடைய நன்முயற்சியால் சிறுகதை இலக்கியம் பிரமாதமாக

முன்னேறிக்கொண்டு உச்ச நிலையை அடைந்து வருகிறது. ஜனநாயகக் கலையாகிய நாவல் உலகிலும் சிறந்த மனோபாவம் துளிர்விட்டிருக்கிறது. வைராக்கியம், இன்ப நினைவு, காரிய தரிசி, மங்கையர் மாண்பு ஆகிய நூல்களை இங்கு குறிப்பிட விரும்புகிறேன்.

கவிதை, நாடகம் முதலிய துறையிலும் குறிப்பிடத்தக்க வெற்றி அடைந்துள்ளது. பத்திரிகைகளில் குட்டி நாடகங் களைப் பார்க்கிறோம். ஒற்றை அங்க நாடகங்களும், முழு நேர நாடகங்களும் தமிழில் வெளிவந்துகொண்டிருக்கின்றன. அறிவு உணர்ச்சி ஊட்டும் மற்ற எல்லாக் கலைகளையும்விட, நாடகம் மக்களுக்கு இலேசில் பயன்படக்கூடியது. காரணம் நாடகம் என்பது வாழ்வின் பிரதிபிம்பம். தமிழ்நாட்டில் சினிமாக்கலை அபரிமிதமாகப் பெருகியதால் நாடகக்கலைக்கு மவுசு குறைந்து போய்விட்டது. சரித்திர நாடகங்கள், சமூக நாடகங்கள் இவை தான் நமக்குத் தேவை. புராணக்கதைகள் அறிவியலுக்குத் தக்கவாறு அமைத்தால்தான் இன்றைய சமூகத்தில் அவை செல்லுபடியாகும். இந்த மூன்று மாதங்களில் வெளியான நாடகங்களில் உயிரோவியமும், விடுதலை முரசும் சிந்தனையைக் கிளரத்தக்க முறையில் அமைந்திருக்கின்றன.

கவிதை என்பது உணர்ச்சியோடு சொல், இசை, கட்டுக் கோப்பு இவைகளோடு ஒத்த உருவத்தில் ஜனிப்பது. கவிதை ஒரு அனுபவம். அதாவது அனுபவத்தை உணர்த்தும் சித்திரம். கவிதையில் உணர்ச்சியின் பெருக்கு சரியான வார்த்தைகளைச் சரியான இடத்தில் கொண்டு கொட்டுகிறது. பழக்கத்தினால் பாஷையின் வேகத்தை, நெளிவு சுளுவைத் தெரிந்துகொண்டு உணர்ச்சியினால் எழுதுபவனே கவிஞனாக முடியும். அவனுடைய வார்த்தைகளில் சக்தியும், வலுவும், உரமும், புஷ்டியும் காண லாம். உண்மையான கவிதையில் ஜீவன், களை தென்படும். மட்டமான செய்யுளில் உயிர் இருக்காது. வெறும் சொல்லடுக் கையே காணலாம். உயர்ந்த கவிதைக்கு உதாரணமாக சமீ பத்தில் பிரசுரமான 'இளந்தமிழா' என்ற நூலைக் குறிப்பிட்டுக் கூற விரும்புகிறேன். பெரியசாமித் தூரன் இயற்றிய நூல் இது. கவிதைமடல். திருத்தொண்டர் கீதம், வீழ்ந்த வெள்ளிகள் ஆகிய கவிதை நூல்களும் படித்து அனுபவிக்கத் தக்கவை,

தமிழ், தமிழ் பண்பாடு இரண்டும் பத்திரிகை உலகில் புகுந்து வாழத் தொடங்கின. அரசியல் கட்சி மேடைகளிலும் ஏறிவிட்டன. பாராளு மன்றத்திலும் நீதி மன்றங்களிலும் ஏறி வாழப்போகின்றன. இனி வருங்காலத்தில் குடியரசாட்சியில் பேச்சுக்கும் எழுத்துக்கும் தனிப்பெருஞ் சிறப்புண்டு. தமிழ் மேடையிலே பேசும் பேச்சுக்களைச் சுருக்கெழுத்திலே எடுக்கும் கலையை பலர் கற்கவேண்டும்.

தமிழுக்குப் புது யோகம் பிறந்துவிட்டதென்று சொல்லலாம். நாடெங்கும் தமிழ் மணம் கமழ, தமிழ் படிப்பவர்களின் எண்ணிக்கை ஒன்றுக்கு நூறாக உயர்ந்து விட்டது. அரசாங்க மாறுதலால் தமிழை ஆவலுடன் படிக்கவும் பேசவும் முற்பட்டிருக்கிறார்கள். இத்தகைய மகத்தான மாறுதலைச் செய்திருப்பவர்கள் இன்றைய தமிழ் எழுத்தாளர்கள்தான். கவிதையிலும், கற்பனையிலும், காவியத்திலும், நாடகத்திலும், நவீன இலக்கியங்களிலும் மற்றெந்த நாட்டுக்கும் தமிழ்நாடு பின்வாங்கவில்லை. தமிழ் மறுமலர்ச்சி வலுத்துவிட்டது. சற்றுமுன் குறிப்பிட்டபடி, இலக்கியத்தில் இருபெரும் பிரிவுகளான கதை, வசனம் என்பவற்றில் வசன இலக்கியந்தான் மறுமலர்ச்சியில் வளம் பெற்று நாளொரு மேனியும் பொழுதொரு வண்ணமாக வளர்ந்து வருகிறது. இன்று தமிழ் வசனம் எழுதுவோர் தங்கள் எழுத்துத் திறத்தால் தமிழ் மொழிக்கும் புத்துயிர் அளித்து வருகிறார்கள். இன்று சிறுகதைகளிலேதான் மறுமலர்ச்சியின் பொலிவையும் வேகத்தையும் கற்பனைத் திறத்தையும் விசேஷமாகக் காண்கிறோம். ‘கடிதம்’ முதலிய இலக்கியத் துறைகளிலும் வளர்ச்சி அடைந்து வருகிறது.

தேசியம், தொழிலாளர் இயக்கம் முதலியவைகளைக் கதையில் விறுவிறுப்புக்காகத் தற்காலப் போக்குக்கு இயைந்தவாறு ஆசிரியர்கள் சிலர் சேர்த்திருக்கிறார்கள். சில ஆசிரியர்களின் தமிழ்நடை நேருக்கு நேர் பேசுவது போல் இருக்கிறது. உணவுப் பற்றுக்குறைக்காலத்தில் உணவு சிக்கன முறையை அநுஷ்டிப்பதற்கு வேண்டிய சமையல் வகைகள், பட்சண வகைகள், தித்திப்பு வகைகள் செய்வது பற்றியும் ஆசிரியர்கள் எழுதியுள்ளார்கள். இதுவும் வரவேற்கத்தக்கது.

இன்று வரைக்கும் அச்சு வாகனம் ஏருமல் ஏட்டுப் பிரதிகளில் இருக்கும் பல அரிய நூல்களை வெளியிடும் முயற்சி வலுப் பெற்று வருவது ஒரு நல்ல அறிகுறி. சரபேந்திரர் வைத்திய முறைகள் என்ற நூல் தஞ்சாவூர் சரஸ்வதி மஹால் நூல் நிலையத்தாரால் அச்சுக்குக் கொண்டு வரப்பட்டிருக்கிறது.

உலகமே கண்டறியாத அஹிம்சைப்புரட்சி யொன்று நடத்தி வெற்றி பெற்றவர் மகாத்மா காந்தி. அடிமைத்தளையில் கட்டுண்டு கிடந்த இந்திய நாட்டை அவர் விடுவித்துத் தன்னம்பிக்கையை ஊட்டினுர். அவரது கொள்கைகளை மக்கள் எல்லோரும் ஏற்று நடந்தாலன்றி இகவாழ்வில் சாந்தியைக் காண முடியாதென்று அறிஞர்கள் எல்லோரும் கூறுகிருர்கள். முப்பத்திநான்கு தேசப்பிரதிநிதிகள் ஒன்று கூடி சேவாக் கிராமத்தில் நடத்தும் லோக சாந்தி மகாநாடே இதற்குச் சான்ருகும். மகாத்மா காந்தியின் கொள்கைகளை விளக்கும் பல நூல்கள் இன்று தமிழில் வெளியாகி வருவது வரவேற்கத் தக்கதே. ராட்டைப் புரட்சி, காந்திஜீயின் பொன்மொழிகள், காந்திய நவநீதம், காந்திஜியின் குரல், பாப்பாவின் காந்தி, சேவாக்கிராம முகாம், சுயம்பூரண கிராமம் ஆகியவை காந்தீயத்தை விவரிக்கும் நூல்களில் சில.

இவ்வாறு புதிய புதிய துறைகளில் தமிழ் வளர்ந்து வரும் இந்நாளில், எழுத்துச் சீர்திருத்தமும் சொல்லாக்கமும் பலர் கவனத்தைக் கவர்ந்திருப்பது இயற்கையே. இதையொட்டி சில நாட்களுக்கு முன் சென்னையில் ஒரு கூட்டம் நடந்ததாகவும் அறிகிரேும்.



# முருகன் பெருமை

**முன்னுரை:**

ஒரு நாட்டில் வாழும் மக்களின் பண்பிற்கு ஏற்பவே, அவர்கள் வணங்கும் தெய்வத்தின் இயல்புகளும் அமைகின்றன. எத்தியோப்பியர்கள் தங்களைப் போலவே, தங்கள் தெய்வமும் கருநிறமும் தட்டை மூக்கும் உடையனவாகக் கருதுகின்றனர்.[1] திரேசிய மக்கள் தங்கள் கடவுளைத் தங்களைப்போலவே, நீல நிறக்கண்களும், செம்பட்டை மயிரும் கொண்டனவாகக் கருதுகின்றனர். அம்முறையில் ஆராய்ந்தால், தமிழ் மக்களின் உயரிய நோக்கங்கள், கொள்கைகள் ஆகியவற்றின் உருவகமாக விளங்கும் முருகப் பெருமானின் அருமை பெருமைகளை, நாம் அறிந்துணர்ந்து கொண்டு மகிழலாம்.

**தொல்காப்பியம்:**

முருகன் வழிபாடு தமிழ் நாட்டில் தொன்று தொட்டு நிகழ்ந்து வருகின்றது. மக்கள் முதன்முதல் தோன்றிய இடம் குமரிக் கண்டமே என்றும், அதன்கண்ணும் குறிஞ்சித் திணைப் பகுதியே யாகும் என்றும் ஆராய்ச்சியாளர் கூறுவர். இற்றைக்கு மூவாயிரம் ஆண்டுகட்கும் மிக முற்பட்டதெனக் கருதப்

---

[1] "Our mental pictures of God are as varied as we are. The Ethiopeans make their Gods black and snubnosed; the Thracians say theirs have blue eyes and red hair...A triangle, if only it had the power of speech, would say that God is eminently triangular, and a circle would say that the Divine Nature is eminently circular, and in this way each thing would ascribe its own attributes to God and make itself like unto God, while all else would appear to it deformed."

—Dr. S. Radhakrishnan,
An Idealist View of Life.

---

'திருக்கோயில்' ஆசிரியர் அனுமதி பெற்று இக்கட்டுரை பிரசுரிக்கப் படுகிறது.

படும் தொல்காப்பியம் என்னும் பழந்தமிழ் இலக்கணம், முருகனைக் குறிஞ்சித் திணைக்குரிய தெய்வம் என்று சிறப்புறக் குறிப்பிடுகின்றது. இவ்வாற்றால் முருகன் வழிபாடு மிகத் தொன்னெடுங்காலம் முதலே நிகழ்ந்து வருதல் தெளியப்படும்.

**இயற்கைத் தெய்வம்:**

முருகன் இயற்கைத் தெய்வம். இயற்கையோடு இயைந்த இன்ப எழில்வாழ்க்கை நடாத்தி வந்த பழந்தமிழ்ப் பெருமக்கள், முருகனை இயற்கையின் வாயிலாக இனிதறிந்தனர். முருகனின் திருவுருவை இயற்கைக் காட்சியின் வாயிலாகக் கண்டு கருதிக் கவினுறப் போற்றிக்களித்தனர். நீலக் கடலில், காலைச் செங்கதிரவன் தோன்றும் அழகிய இனிய காட்சியைக் கண்டு மகிழ்ந்த பழம் பெரும் தமிழ்ச் சான்றோர்கள், அக்காட்சியின் வாயிலாக, நீல மயில் மீது இவர்ந்து வரும் செந்நிறம் உடைய முருகனை நினைந்துணர்ந்து, மிகப் பழங்காலம் முதலே வழிபடத் தொடங்கினர் என்பர் அறிஞர்.

**சங்க நூல்கள்:**

முருகனைக் குறித்து முன்னைத்தமிழ்ப் பெருஞ் சான்றோர்கள் விளக்கி யருளிச் செய்துள்ள கருத்துக்கள், நினைத்துணருந் தோறும் அனைத்தெலும்பும் உள்ளுருக ஆனந்தத் தேன் சொரியும் இயல்பினவாக உள்ளன. முருகன் தன் அடியவர்கள் நினைத்தவற்றை யெல்லாம் நிறைவேற்றி முற்றுவித்துத் தருதலில் சிறந்தவன் என்று, புறநானூறு குறிப்பிடுகின்றது.

முருகன் அருளே வடிவானவன். தன் அடியவர்கள் செய்யும் குற்றங்களைப் பொறுத்துக்கொண்டு, அவர்களுக்கு அருள் புரிபவன், ஆதலின் தண்டிக்கும் தன்மையே இல்லாத சிறந்த கடவுள் என்னும் கருத்தில், 'தெறல் அரும் கடவுள்' என்று, அகநானூறு என்னும் சங்க நூல் முருகனைச் சிறப்பித்துக் கூறுகின்றது.

**தமிழ்க் கடவுள்:**

முருகன் தமிழ்க் கடவுள். முருகனே தமிழ் மொழியை முதன் முதலில் அகத்தியருக்கு அறிவுறுத்தினன் என்பது வரலாறு. மேலும் சிவபிரானுக்குப் பிரணவப் பொருளைத் தமிழி

லேயே முருகன் உபதேசித்தான்.

> கோன்றைச் சடையார்க்கு ஒன்றைத் தெரியக்
> கோஞ்சித் தமிழால் பகர்வோனே.

என்பது அருணகிரிநாதர் திருப்புகழ். கூடல் மா நகரில், ஆலவாய் அவிர்சடைக் கடவுளுடன் குன்றம் எறிந்த குமர வேளும் சங்கம் இருந்து தமிழ் ஆராய்ந்தான் என்பர் நக்கீரர். "சங்கத் தமிழின் தலைமைப் புலவன்" என்பர் குமரகுருபர அடிகள். தமிழ் மொழியின் மெய் எழுத்துக்கள் பதினெட்டும் தன்னுடைய கண்களாகவும்,[1] தமிழில் வல்லினம் மெல்லினம் இடையினம் என வழங்கும் எழுத்துக்கள் ஆறும் திருமுகங் களாகவும், தமிழின் அகரம் முதலிய உயிர் எழுத்துக்கள் பன்னி ரண்டும் தோள்களாகவும், தனிநிலை எனப்படும் ஆய்தமே, ஒப்புயர்வற்ற நிலையில் தனிச் சிறப்புற்றுத் திகழும் வேலாகவும் கொண்டு, தமிழ்த் தெய்வமாகிய முருகன், தமிழ் வடிவினனாக விளங்குகின்றான்.

> கண்நிகர் மெய்யும், சென்னிக்
> கணம்உறழ் இனத்தின் கூறும்,
> திண்ணிய புயங்க ளேபோல்
> திகழ்தரும் உயிரும், வேறொன்
> றெண்ணிடற் கரிய தாகும்
> எஃகமும், இயலிற் காட்டும்
> புண்ணிய முருகன் செய்ய
> பொற்பதம் போற்றி வாழ்வாம்.

என்பது, புலவர் புராணம் பாடிய திருப்புகழ்த் தண்டபாணி சுவாமிகள் அவர்களின் அரிய திருப்பாடல்.

பண்பு நலங்கள்:

இந்து சமயத்திற்குரிய வேதாகம உபநிடதங்கள் முதலியன எல்லாம், கடவுளைச் சத்து—சித்து—ஆனந்தம் என்னும் முப்பெரும் பண்புகளும் ஒருங்கியைந்த பொருளாகக் கூறும்.

---

[1] தந்தையாகிய சிவபிரானுக்கு முக்கண்கள் உள்ளமைபோல, முருகனாகிய மைந்தனுக்கும் முக்கண்கள் உண்டு என்றும், ஒரு முகத்திற்கு மூன்றாக முருகனின் ஆறு திருமுகங்களுக்குப் பதினெட்டு கண்கள் உண்டு என்றும், பெரியோர்கள் கூறுவர்.

அவற்றுள் சத்து என்பது சிவம்; சித்து என்பது திருவருளாகிய சக்தி; ஆனந்தம் என்பது முருகன். இவ்வுண்மையினையே சிவ பிரான் கோயில்களில் எல்லாம் வைத்து வழி படப்பெறும் சோமாஸ் கந்த மூர்த்தம் உணர்த்துகின்றது.

மேலை நாட்டு நாகரிகப் பண்பாடுகள் அனைத்திற்கும் சாலவும் அடிப்படை வகுத்தவர்கள், கிரேக்க நாட்டு மக்கள் என்பர். அக் கிரேக்க நாட்டு மக்கள் உண்மை (Truth), நன்மை (Goodness), அழகு (Beauty) என்னும் மூன்றையும் மிகச் சிறந்த பண்புகளாகப் போற்றுவர். அவற்றுள் உண்மை யைச் சிவம் என்றும்; நன்மையைச் சக்தி என்றும்; அழகை முருகன் என்றும் நாம் கூறுதல் பொருந்தும். முருகன் என் றும் நாம் கூறுதல் பொருந்தும். முருகன் என்னும் சொல் லுக்கு அழகு, இளமை, மணம், கடவுட்டன்மை என்னும் பொருள்கள் இருத்தல், இங்கு நாம் கருதுதற்குரியது.

முருகன் அடியவர்களுக்கு ஞான குருவாக எழுந்தருள் கின்றான். பழநி ஆண்டவன் வடிவில் யோகியாக ஒளிர்கின் றான். வீரர்களுக்கெல்லாம் மிக்க பெரு வீரனாக விளங்குகின் றான். தேவர்களுக்கெல்லாம் தேவனாகத் திகழ்கின்றான். தவ முனிவர்களெல்லாம் முருகனையே தம் வழிபடு கடவுளாகக் கொள்ளுகின்றனர். கலைஞர்களுக்கும், புலவர்களுக்கும் அவன் கருணை புரிகின்றான்.

குழந்தைகளுக்குக் குழந்தை வேலன் ஆகவும், இளைஞர் களுக்குப் பாலசுப்பிரமணியன் ஆகவும், கலைஞர்களுக்கு ஆறு முகம் கொண்ட அண்ணல் ஆகவும், வீரர்களுக்குத் தேவ சேனாபதி ஆகவும், மந்திரோபதேசம் பெற விரும்பி வழிபடும் அன்பர்களுக்குச் சுவாமிநாதன் ஆகவும், இல்லறநிலையினர்க்கு வள்ளி தெய்வயானை சமேத சுப்பிரமணியசுவாமி ஆகவும் பற் றற்ற தூய ஞானத் துறவற நிலையினர்க்குப் பழநி யாண்டவர் ஆகவும் பிறவாறும் விளங்கி,அவரவர்களுக்கு ஏற்ற நிலைகளிற் பலவேறு வகைகளில், முருகப்பெருமான் அருள் புரிந்து காத்து வருகின்றான்.

**களவும் கற்பும்:**

தமிழிலுள்ள அகப் பொருள் இலக்கண நூல்கள் கூறும்

கற்பு நெறி, களவு நெறி என்னும் இருவகை நெறிகளையும், தெய்வயானையின் திருமணத்தாலும் வள்ளியம்மையின் திரு மணத்தாலும் உலகுக்கு முறையே உணர்த்தியருளினுன் முருகன். வள்ளி அம்மையின் திருமணம் ஐம்புலன்களாகிய வேடர்களி டையே அகப்பட்டு உழன்று வரும் உயிர்களை, இறைவன் குரு வாக வந்து தடுத்தாட் கொண்டருளும் தன்மையினையே, தத்துவ முறையில் தகவுற உணர்த்துகின்றது. "பணி யாது? என வள்ளி பதம் பணியும் தணியா அதிமோக தயாபரனுக" முருகன் விளங்குதல், அவன் அடியார்களுக்கு எளியனுகும் இனிய இயல்புடையவன் என்னும் உண்மையினையே உருவக முகத்தால் உணர்த்துகின்றது.

கந்த புராணம்:

முருகனின் வரலாறு கூறும் கந்த புராணம், உண்மையில் ஆராய்ந்துணர்ந்தால், ஒருவகையில் நமது சொந்த புராணமே யாகும். கந்தபுராணத்தில் வரும், சூரபதுமன், சிங்கமுகாசுரன் தாரகாசுரன் என்னும் மூவரும், முறையே, ஆணவம், மாயை, கன்மம் என்னும் மும்மலங்களைக் குறிப்பவரேயாவர். தாரகன் கன்ம மலம். சிங்கமுகன் மாயாமலம். சூரபதுமன் ஆணவ மலம். கன்ம மலம் முதலில் அழியும். ஆதலின் தாரகாசுரன் முதலில் இறந்தான். மாயாமலம் அறிவை விளக்கும், ஒரே வழி மயக்கமும் செய்யும். அம்முறையில், சிங்கமுகாசுரன் நல்லியல் பும் தீய இயல்பும் ஒரு சேரக் கொண்டிருந்தான். ஆணவ மலம் ஆவாரக சக்தி, அதோ நியாமிகா சக்தி என்னும் இரு திற ஆற்றல்கள் உடையது. அவ்வாறே சூரபதுமனும் மனித உட லும் குதிரைத் தலையும் கொண்டு, சூரன், பதுமன் என இருவேறு உடல்கள் ஒன்றி நின்றுன். ஆணவ மலம் ஆற்றல் கெடுமே யன்றி, என்றும் அழிவதில்லை என்பது சைவ சித்தாந்தம். அம் முறையில். சூரபதுமன் தன் தீய இயல்புகள் அழிந்து சேவலும் மயிலுமாக முருகனுக்குத் தொண்டு பூண்டு என்றும் அழியாத பெருநிலை பெற்றுன். அஞ்ஞானத்தை ஞானமே வெல்லும். சூர பதுமனுகிய அஞ்ஞானப் பிழம்பை, மெய்ஞ்ஞானமாகிய வேற் படை வென்றது. முருகனுக்கு வேல், ஞான சக்தி; வள்ளி அம்மை இச்சா சக்தி; தெய்வயானை. கிரியா சக்தி. முருகனின் மயில் விந்து தத்துவம், கோழி நாத தத்துவம் என்னும் உண்

மைகளைக் கந்தபுராணம் கவினுற விளக்குகின்றது.

**ஆறுபடை வீடு:**

முருகன் திருப்பரங்குன்றம், திருச்சீரலைவாய், திருவாவினன்குடி, திருவேரகம், குன்றுதோருடல், பழமுதிர்சோலை என்னும் ஆறு தலங்களில் எழுந்தருளி விளங்குகின்றான். முருகன் படை வீரர்களுக்கெல்லாம் தலைசிறந்த படைவீரன் ஆதலின், அவன் எழுந்தருளி விளங்கும் தலங்கள், படை வீடுகள் எனப் பெயர் பெற்றன. ஆறுபடை வீடுகளிலும் முறையே ஒளிவடிவம், அருள்வடிவம், தவவடிவம், மந்திரவடிவம், எளிமை வடிவம், வியாபகவடிவம் என்னும் நிலைகளில், முருகன் விளங்கும் இயல்பினைத் திருமுருகாற்றுப் படை சிறப்புற விளக்குகின்றது.

**சமஷ்டித் தெய்வம்:**

முருகனை வணங்கினால், பல கடவுளரை வணங்கி அடையும் பயன்களையெல்லாம் நாம் ஒருங்கே பெறலாம். மைந்தனுக்குச் செய்யும் சிறப்பால், தந்தை தாயராகிய சிவபிரானும் உமாதேவியும், தம்பியைப் போற்றுதலால் தமையனாகிய விநாயகரும், மருகனை வழிபடுதலால் மாமனாகிய திருமாலும், தலைவனை வணங்குதலால் தேவரும், முனிவரும் ஆகிய அனைவரும் மகிழ்ச்சி அடைவர். ஆதலின் முருகன் வழிபாடு மிக்க சிறப்புடையது. எல்லாக் கடவுளரின் இயல்புகளும் தன்பால் ஒருங்கே கொண்ட முருகனைச் 'சமஷ்டித் தெய்வம்' என்பர் பெரியோர். முருகன்பால் நாம் அருளை எளிதாகவும் விரைவாகவும் பெறலாம் 'மழக் கை இலங்கு பொற்கிண்ணம் என்றலால் அரியை என்றுனைக் கருதுகின்றிலேன்' என மாணிக்கவாசகர் பாடியது, முருகன் திறத்தில் மிகவும் பொருந்துவதாகும்.

**வேளைக்காரன்:**

தனது அன்பர்களாகிய அடியவர்களை உற்ற வேளையில் வந்து காக்கும் சிறப்பால், முருகன் 'வேளைக்காரன்' எனப்படுவான். வேளைக்காரர் என்னும் படையைச் சேர்ந்த சிறந்த வீரர்கள், எங்ஙனம் உற்றவேளையில் உயிர் கொடுத்தும் தங்கள் அரசனைக் காப்பாற்றும் உறுதியும் கடமையும் உடையவரோ,

அங்ஙனம் தன் அடியவர்களைக் காத்தலில் உறுதியும் கடப்பாடும் பூண்டு கொண்டிருப்பவன் முருகன். அச்சிறப்பை வலியுறுத்தவே அருணகிரிநாதர் முருகனை 'வேளைக்காரன்' என வியந்து கூறித் துதித்துப் போற்றுவர்.

முருகன் திருவடிகளில் அடைக்கலம் புகுந்தால், எத்தகைய கொடியவர்களும் திருந்தி நலம் பெற்று உய்வர். சில தெய்வங்கள் தம்மை எதிர்த்த பகைவர்களை அறவே அழித்தொழித்ததாக நாம் நூல்களில் அறிகின்றோம். ஆனால், முருகனோ தன்னை எதிர்த்து நின்ற கொடியவனாகிய சூரபதுமனையும் நல்லவனாக்கித் திருத்தி ஆட்கொண்டு காத்தருளினார்.

தீயவை புரிந்தா ரேனும்
குமரவேள் திருமுன் உற்றால்
தூயவர் ஆகி மேலைத்
தொல்கதி அடைவர் என்கை,
ஆயவும் வேண்டும் கொல்லோ?
அடுசமர் அந்நாட் செய்த
மாயையின் மகனும் அன்றோ
வரம்பிலா அருள்பெற் றுய்ந்தான்!

— கந்த புராணம்.

**கற்பக மரம்:**

முருகன் தன் அடியவர் வேண்டும் நலங்களை யெல்லாம், அவர்கள் வேண்டியவாறே விரும்பிக் கொடுத்தருளும் பெருந்தன்மை வாய்ந்தவன். கேட்டன எல்லாம் கொடுத்தருளும் மாட்சிமையால் அவனைக் கற்பக மரம் போல்பவன் எனக் கவிஞர்கள் புகழ்ந்து பாடுவர். வள்ளி தெய்வயானையரைக் கிளைகளாகக் கொண்டு, பல்லுயிர்க்கும் அருளைப் பூத்து, அவற்றின் பிறவியைக் காய்த்திட்டு, அன்பர்கள் எல்லோருக்கும் முக்திக் கனியை அளிக்கும் கற்பக மரமாக முருகன் விளங்குகின்றான்.

கல்லகம் குடைந்த செவ்வேற்
கந்தன்ஓர் தருவ தாகி
வல்லியர் கிரியை ஞான
வல்லியின் கிளையாய்ச் சூழப்
பல்லுயிர்க்கு அருளைப் பூத்துப்

பவநெறி காய்த்திட்டு அன்பர்
எல்லவர் தமக்கும் முத்தி
இருங்கனி உதவும் என்றும்

— கந்த புராணம்.

**கலியுகத்தும் வரதன்:**

முருகன் கலியுக வரதன் என்பர். பாம்பன் குமர குருதாச சுவாமிகள், அங்ஙனம் கூறின் முருகன் கலியுகத்தில் மட்டுமே வரம் கொடுப்பவன் எனப் பொருள்பட்டுப் பிழையாய் முடியுமாதலின், எல்லா யுகங்களிலுமே அடியவர்களுக்கு வரங்களைத் தரும் இயல்புடைய முருகன், கொடியதாகிய கலியுகத்திலுங் கூடப் பேரருள் சுரந்து வேண்டும் வரங்களை விரைந்து கொடுக்கும் பெருமாட்சிமையுற்றுப் பிறங்குகின்றான் என்னும் கருத்தமையக் "கலியுகத்தும் வரதனும் கந்தன்" என்றே கூறுதல் வேண்டும் என ஒருகால் தம் மாணவர்களுக்குப் பணித்தருளினார் என்பர். இவ்வாற்றால் முருகனின் அருள் மாட்சிமையை நாம் பெரிதும் உணரலாம்.

**முடிவுரை:**

முருகனை அன்புடன் வழிபட்டு, முருகா முருகா எனப் பல காலும் கூறித் தியானிப்பவர்கள், என்றும் குறையாத பெருஞ் செல்வத்தைப் பெறுவார்கள்; அவர்களை ஒருபோதும் எத்தகைய துன்பமும் அணுகாது; அவர்களுக்கு எந்த ஒரு நோயும் வராது. அவர்கள் சுற்றமும் கிளையும் சூழ, உயர்ந்த இன்பங்களை நுகர்ந்துகொண்டு நீடுழி காலம் வாழ்வார்கள்.

முருகா எனஉனை ஓதும்
தவத்தினர் முதுலகில்
அருகாத செல்வம் அடைவார்;
வியாதி அடைந்து நையார்;
ஒருகால முந்துன்பம் எய்தார்;
பரகதி உற்றிடுவார்;
பொருகாலன் நாறு புகார்;
சமரா புரிப் புண்ணியனே.

— திருப்போரூர்ச் சந்நிதி முறை.

— ஆசிரியர்.

# HYMNS OF THE TAMIL SAIVITE SAINTS

BY

F. KINGSBURY, B. A. (Madras)

AND

G. E. PHILLIPS, B. A. (Lond.), M. A. (Oxon.)

---

[மலர் 18, இதழ் 3-ன் தொடர்ச்சி]

## III

## SUNDARAMURTI SWAMI

(Abbreviated as SUNDARAR)

79. வாழ்வாவது மாயம்மிது மண்ணாவது திண்ணம்
பாழ்போவது பிறவிக்கடல் பசிநோய் செய்த பறிதான்
றாழாதறஞ் செய்ம்மின் றடங்கண்ணான் மல ரோனுங்
கீழ்மேலுற நின்றான்றிருக் கேதாரமெ னீரே.

Life and experience have no value, no reality. God alone is real, the refuge from the unreal.

79. Our life is all unreal,
    Its end is only dust,
Out of the sea of birth
    Come ruin, pain and lust.
Delay not to do good
    But praise Ketaram's king,
Whom Vishnu and great Brahm
    Vainly sought sorrowing.

(To be continued)

---

உ

சிவமயம்

# இளையான்குடி, ஸ்ரீ மாற நாயனுர் புராணம்

இஃது
இளையான்குடி வேதாந்தமடம்
இராமேஸ்வரம் சிவாஸ்ரமம்
இவற்றின் ஸ்தாபகரும் தலைவரும் ஆன ஸ்ரீ சிவானந்த ஞான தேசிக சுவாமியவர்களால் பாடப் பெற்றது.

### ஸ்ரீ சொருப வணக்கம்

சத்திய சித்கன சாஸ்வத சாந்த
அத்வைத மோன அகண்டறி வான
நித்திய வக்ஷர நின்மல ருபம்
புத்தியி னித்தியம் போற்றுதல் செய்வாம். 1

### ஸ்ரீ சர்வ மூர்த்தி வணக்கம்

கரிமுக னறுமுகன் கெளரிமா லயனரன்
பரிதிவிண் ணவர்பதி பங்கய விறைவியர்
திரிபறு விண்ணவர் சித்தவிஞ் சையர்பதம்
புரியுமிந் நூல்பெறப் போற்றுகின் றேனே. 2

### ஸ்ரீ பஞ்சு மூர்த்தி வணக்கம்

அருமறை யடியொரு வாகம தாகிய
கரிமுக வரதனைக் கந்தனை யுமையை
அரியய னமரரொ டனைவர்த மிறையைத்
திரிபறு குரவனைச் சிந்தனை செய்வாம். 3

### ஸ்ரீ அருளிறை வணக்கம்

என்னை யாண்டவன் கானப்பேர் வாழ்ந்திடு மிறைவன்
முன்னை ஞானத்தை மொழிந்திடும் முனிவர்க்கும் முதல்வன்
அன்னை போன்றெனை யனுதினம் காத்திடு மையன்
தன்னைத் தானருள் தயாபர செல்லப்ப நாதன். 4

### அவையடக்கம்

மெய்யுணர் சேக்கிழார் விரித்த விக்கதை
மெய்யுணர் சிறுவனுன் விரிக்கும் விந்தைதான்
மெய்யுணர் தபனனுல் விளக்கு மேதினி
மெய்யுணர் மின்மினி விளக்கல் மானுமே. 5

இளசையில் வாழ்ந்து மாற ளிறையன்பர் பக்தி பூண்டு
வளமலி கங்கை வேணி மகதேவர் பதம டைந்த
அளவிலாக் காதை தன்னை யன்பர்கள் விரும்பிக் கேட்க
வுளமகிழ்ந் துரைத்தே னித்தை யுத்தம ருவந்து கொள்வார். 6

இப்பெருங் கதையை முன்னோ ரெழுதிய சுவடி பார்த்தும்
செப்பரும் பெரியோர் கர்ன பரம்பரை செவியிற் கேட்டும்
தப்பறுங் கல்வெட் டுக்கள் சார்ந்துள விடம றிந்தும்
செப்பின னிதனை யித்தைத் தெரிந்தவ ருவந்தி டாரோ. 7

கனிமொழி யுமையாள் பாகற் கன்டுளங் குளிருந் தொண்டர்க்
கினியன பகர்ந்து செய்யு மிளசைவாழ் மாற வெந்தாய்
இனிமையாம் பொருளுஞ் சொல்லு மியைந்திடாச் சிறுவனேனும்
தனிமையாம் நினது கீர்த்தி சாற்றினே னேற்றுக் கொள்ளே. 8

காப்பு

அத்திமா முகனே போற்றி அறுமுக வேலா போற்றி
சத்தியா முமையே போற்றி சங்கரா போற்றி யெங்கள்
சத்திய குருவே போற்றி சங்கம பத்தி செய்து
சத்திய முத்தி மாறன் சார்கதை யுரைப்ப தற்கே. 9

நாட்டுச் சிறப்பு

பூமகன் படைப்பின் மேலாம் பூவுல கதனின் மேலாங்
கோமகன் பரத னண்ட குவலய மத்தின் மேலாந்
தேமகன் காவி னஞ்சூழ் திருப்பாண்டி நன்னாடு அத்தை
மாமக னன்றி நம்மால் வகுக்கலாந் தகைமைத் தாமோ. 10

தடாதகை யாகி யம்மை தனியர சளித்த நாடு
சடாதரன் மாற னாகித் தனிக்குடை நிழற்று நாடு
படாதவேற் குமரன் பாண்டி யரசனுய்ப் பரித்த நாடு
கெடாதிதன் பெருமை தன்னைக் கிளத்துன ருலகில் யாரே. 11

நகரச் சிறப்பு

இப்பெரு நாட்டில் வைகை யியல்வட கரையின் மேய
செப்பரு மிளசை நல்லூர் செழுமி ஊயான் குடியென்
றெப்பறும் நாமம் பூண்ட வுயர்பதி யுளதாம் அங்கு
முப்புர தகனன் மாயன் மூர்த்திநீர் தலமு முண்டால். 12

(தொடரும்)

# இன்சொல்

புலவர். திருமேனி நாகராசன் அவர்கள்,
தமிழாசிரியர், காரைக்கால்.

---

முன்னுரை

உலக உயிர்களுள் தலையது மாந்த உயிர். மாந்தப்பிறவி அரும்பெறல் பிறவியாம். என்னே, "அரிதரிது மானிடராய்ப் பிறத்த லரிது" என்ற ஔவை வாக்கான் அறிக. மனிதற்கே உரிய மாண்புறு குணங்களுள் பேச்சும் ஒன்றும். பேசுமாற்றல் பெறலரும் பேறன்றே? பேச்சு குழவியிடத்துத் தோன்றி அமுத மாகி இளைஞரிடத்துப் பிறந்து இன்பமாகிச் சான்ருேரிடத்து நின்று மறை மொழியாகிறது.

இன்சொல்

பேச்சுக்கு அழகு இனிமை உடைமை. எனவே இனிமை உடைய சொல் இன்சொல் ஆகிறது. இன்சொலாவது அன் போடு கலந்து வாய்மை பொருந்தி அறத்தினை உணர்ந்தார் வாயிற்ருேன்றிய சொல்லாம். மனத்தின்கண் உவகையை வெளிப்படுக்கும் தன்மையனவாய் அமைதல் இன்சொற்கு அழகாம்.

வன்சொல்

இன்சொல் எனவே, அருத்தா பத்தியான் வன்சொல் என் பதும் பெற்றும். வன்சொல், கடுஞ்சொல், பழிச்சொல் என்பன ஒரு பொருட் கிளவி. வன் சொலாவது ஒருவனது ஒளியைக் கோறலாகிய சொல்லாம். அச் சொல்தாம் மறங்கலந்து படிறு விரவி விரும்பியாங்கு ஒழுகும் புல்லறிவாளர் வாயிற்ருேன்று வனவாம்.

இன்சொல் — கனி

இன்சொல் கனியை ஒப்பதாம். என்னை, கனியின் பயன்

இன்பம் உறுத்தலே; இன்சொலின் பயனும் இன்பம் உறுத்தல் ஆதலின் ஏற்புடைக்கனி இன்சொற்கு உவமையாதல் பொருந் தும். இனி, கனியென்றது ஔவை உண்ட நெல்லிக்கனி போன்ற அமிழ்தானவற்றையே. உண்டாரை வாழ்விக்கும் தன்மையது அந்நெல்லிக்கனியாதலின், இன்சொலும் செவியுறு வாரை உள்ளந் தழையச் செய்து உயிர்ப்பு அருளும் என்க.

வன்சொல் — காய்

வன்சொல் காயை ஒப்பதாம். என்னை. காயின் பயன், துன்பம் உறுத்தலே. வன்சொலின் பயனும் துன்பம் உறுத்தல் ஆதலின் ஏற்புடைக் காய் வன்சொற்கு உவமையாதல் பொருந் தும். இனிக் காய் என்றது காஞ்சிரங்காய் போன்ற தீயன வற்றையே. உண்டாரை ஒல்லையில் துன்புறுத்தி அழிப்பது அக் காஞ்சிரங்காயாதலின், வன்சொலும் செவியுறுவாரை அழியச் செய்து விடுமென்க.

இன்சொலின் நன்மை

இன்சொல் நட்பை ஏற்படுத்தும்; வறுமையை நீக்கும்; எல் லாச் செல்வமும் தந்துநிற்கும்; வாழ்வு பயந்துவிடும்; வளங்கள், நலங்கள் நல்கும்; உண்மையான அணியாகி உலகில் அழகுற விளங்கச் செய்யும்; புகழ் பயக்கும்; இம்மை இன்பங்களைக் கொடுக்கும்; மறுமைக்கும் வித்தாகிப் பயன் ஊட்டும்.

வன்சொலின் தீமை

வன்சொல் பகையை ஏற்படுத்தும்; வறுமையைக் கொடுக் கும்; பழி ஏற்படுத்தும்; தீமையைத் தேடித்தரும்; ஒளியைக் கோறும்; உடைமையை அழிக்கும்; இம்மைக்கண் துன்பம் பயந்து நிற்கும்; மறுமைக்கண் நரகம் நல்கி விடும்.

இன்சொற்கு எடுத்துக்காட்டு

இன்சொலால் மேம்பட்டவர் பலர். அன்னவர் இலக்கியத் திலும், வரலாற்றிலும், சமுகாயத்திலும் மிக்குள்ளர். அவருள் இன்சொல் உடைமைக்கு இலக்கியத்துள் ஏற்புடை எடுத்துக் காட்டாவார் ஒருவர். அவர் யாவரெனில், அவரே கற்புக்கடம் பூண்ட பொற்புடைத் தெய்வமாகிய கண்ணகி என்க. மேலோர் தான், கோவலன் மாதவிபால் மயக்குண்டு அவள் பின் சென்று

அவள் சொற்கேட்டு அவள் இல்லிருந்து குன்றனைய வான் பொருள் தொலைத்துப் பின்னர் ஊழ் உருத்து வந்து ஊட்டினமையின் மாதவியை நஞ்செனநவின்று தன்மனை புக்கனன். புக்கவன் புகன்றமொழி பொருள் இன்மை நோக்கியே என்றெண்ணினள் கண்ணகி. அந்நிலையினும் கண்ணகி முகத்தில் நகையே. அவள் வாயினின்றும் அன்பு கலந்து வாய்மை விரவிக் கணவன் மனத்தின்கண் உவகையை வெளிப்படுக்குஞ் சொல்லாகிய "சிலம்புள" என்னும் இச்சொல் வெளிவருகிறது. எத்துணை நிறை உடைமை! தான் துன்பத்தின் கொடுமுடியில் நின்ற விடத்தும் தன் துன்பமெலாம் மறந்து தன் கேழ்வன் இன்பமொன்றையே நச்சிக் கண்ணகி இன்சொல் வழங்கினமை ஈண்டு அறியற்பாலதாம். அவளது இன்சொல் வெந்தழிந்த கோவலனுக்கு மாமருந்து ஆகிறது. இன்சொல் இருவர்க்கும் இணைப்புப்பால மாயினமை அறிக.

வன்சொற்கு எடுத்துக்காட்டு

இனி, வன்சொலால் வாழ்விழந்த இலக்கியக்காட்டு ஒன்று காண்பாம். மருதி என்பாள் ககந்தன் காலத்துக் காவிரிப்பூம் பட்டினத்துக் காரிகைஆவாள். அவள் கற்பின கொழுந்தாவாள். தற்காத்துத் தற்கொண்டான் பேணித் தகை சான்ற சொற்காத்துச் சோர்விலாது வாழுஞ்சீரியள். காவிரிப்பூம் பட்டினத்துக் கற்புடைக் காரிகை எழுவருள் ஒருத்தியாய் எண்ணப்பெற்ற மேன்மையள். அன்னவள் ஒருநாள் காவிரியில் நீராடித் திரும்புங்காலை ககந்தன் மைந்தன் அவளது தோற்றப் பொலிவினைக் கண்டு காமுற்றுப் பழிச்சொல் பகருவானாயினன். அவளை வம்பைப் பரத்தையெனக் கொண்டு வரம்பில் வன்சொல் வழங்குவானாயினன். காமுகனாகிய ககந்தன் மைந்தன் கழறிய வன்மொழி அனைத்தும் கேட்டு மருதி துடித்துப்போயினாள். அவனது வன்சொல் நஞ்சு தோய்ந்த கணை வடிவெடுத்து மருதியின உளத்து ஆழப் பாய்ந்து மீப்பெரு துன்பத்தை ஏற்படுத்திற்று. உடன் அவள் அரற்றி எழுந்து தெய்வத்திடம் முறையிடவே, அத்தெய்வம் கணக்கிட்ட காலமாகிய ஏழு நாட்களுள் ஒடிவில் செங்கோல் புரக்கும் வேந்தனாகிய ககந்தன் தன் மைந்தனின் அடாத செயல்கண்டு அவனை வாளெடுத்து வீசிக் கூறுபடுத்திக்

(தொடர்ச்சி அடுத்த பக்கம் பார்க்க)

# துணை

திரு. சி. குமாரஸ்வாமி அவர்கள்,
176, மேட்டுத்தெரு, நத்தம் போஸ்டு,
செங்கல்பட்டு.

உலக வாழ்க்கையில் பிறர் துணையின்றி எக்காரியமும் செய்ய இயலாது. நாம் நல்ல வழியில் நடக்க, கல்வியில் சிறந்தவர்களாகக் குருவின் துணை மிக்க அவசியம். ஆகவே அக்கால (திண்ணை)ப் பள்ளிக் கூடங்களில் புதிதாகச் சேரும் மாணவனுக்கு முதலில் "ஹரி ஓம், ஹரி நமோத்து சிந்தம், குரு வாழ்க! குருவே துணை!" என்று சொல்லித் தருவது வழக்கம்.

"பெரியாரைத் துணைக்கொள்," என்று ஒரே வரியில் ஔவையார் கூறியுள்ளார் ( ஆத்திச் சூடி ) வெற்றிவேற்கை

---

(முன் பக்கத்தொடர்ச்சி)

கொன்றான். வன்சொல் சுகந்தன் மைந்தனுக்கு உயிர்க்கு இறுதியாயினமை அறிக. என்னே! வன்சொலின் வன்மை!

முடிவுரை

எனவே இதுகாறும் கூறியவாற்றான் பேச்சு மனிதற்கே உரிய தனிச் சொத்தென்பதும், சொல் இன்சொல், வன்சொல் என இருவகைத்தாய் இயலுமென்பதும், இன்சொல் ஔவை உண்ட அருநெல்லிக்கனியாய் உண்டாரை வாழ்விக்குந் தன்மையதென்பதும், கடுஞ்சொல் காஞ்சிரங்காய்போல உண்டாரை வீழ்விக்குந் தன்மையதென்பதும் இன்சொலால் நன்மை பல நாடுமென்பதும், வன்சொலால் தீமை பல சூழுமென்பதும், இன்சொலால் ஏற்றமுற்றான் கண்ணகி என்பதும், வன்சொலால் பட்டொழிந்தான் சுகந்தன் மைந்தன் என்பதும் பெற்றாம். பெறவே, இன்சொல் போற்றி இன்பங்கள் துய்த்து இம்மையும் மறுமையும் முட்டின்றி எய்துவோமாக.

"துணையோடல்லது நெடுவழி யேகேல்," என்கிறது. திருவள்ளுவர் "வாழ்க்கைத் துணை நலம்," "பெரியாரைத் துணைக் கோடல்," என்று இரண்டு அதிகாரங்கள், திருக்குறளில், அருளியுள்ளார். (அதிகாரம் 6, 45). ஆகவே பிறர் துணை உலக வாழ்வுக்கு அத்யாவசியம்.

நாம் உலக பந்தத்திலிருந்து விடுபட்டு மறுபிறப் பின்றி முக்தியடையவும் துணை வேண்டும். அத்துணை, தெய்வம் தான். எனவே நம் முன்னோர்கள் "கணபதி துணை, முருகன் துணை, வேலுமயிலும் துணை, அம்பிகை துணை, நடனசபாபதி துணை, நாரயணன் துணை," என்று ஆண்டவனை நம்பி எக்காரியமும் செய்ய ஆரம்பித்தனர். ஆண்டவனும் துணை நின்றான். இக்காலத்தில் "எல்லாம் நானே," என்ற ஆணவம் மிஞ்சி விட்டது. எதுவும் உருப்படுவது இல்லை!

"கற்றுணை பூட்டியோர் கடலில் பாய்ச்சினும் நற்றுணை யாவது நமச்சிவாயவே," என்று அப்பர் சுவாமிகள் உள்ள முருகப் பாடினார். உடனே கல் மிதந்தது. சுவாமிகளும் தீங்கின்றிக் கரையேறினார். அபிராமிபட்டர் அபிராமியம்மையை "விழுத்துணையே" (பாட்டு 1) "துணையும் தொழு தெய்வமும்," (பாட்டு 2) என அழைத்தார். அம்மையும் அருள் செய்து, அவர் சொன்ன பொய்யை (அமாவாசை திதியைப் பௌர்ணமி திதி என்றது) மெய்யாக்கித் துணை நின்றாள். வள்ளலார் ஸ்ரீ ராமலிங்க சுவாமிகள் சென்னை கந்த கோட்டத்து முருகனை, "தோகை வாகனமீது இலங்கவரு தோன்றலே,சொல்லரிய நல்ல துணையே" எனப் போற்றியுள்ளார் (தெய்வ மணிமாலை – 3)

திருமந்திரம் அருளிய திருமூலர், "செறிதுணையாவது சிவனடிச் சிந்தை," "வழித்துணையாம் பெருந்தன்மை வல்லானே," "அன்பினுள்ளார்க்கே யணை துணையாமே" என்கிறார் சிவபெருமானை.

அருணகிரிநாதர் நமக்கு நல்ல துணையைக் காட்டுகிறார். நமது இரு விழிகளுக்கு முருகனது மென்மையான இரு திருவடிகளும், மெய்மை குறையாத வார்த்தைகள் சொல்ல (துதிக்க) "முருகா" என்ற திருப் பெயரும், நாம் முன் ஜென்மத்தில் செய்த பழி பாவங்களைப் போக்கி நம்மைக் காக்க அவனது

பன்னிரு தோள்களும், தனியே செல்லும் போது (பயந்த தனி வழி) செங்கோடைக் குமரனது கூர்மையான வேலும், மயிலும் துணை நிற்கும், என்றார். (கந்தர் அலங்காரம் 70).

"துதிக்கு மடியவர்க் கொருவர் கெடுக்கவிடர் நினைக் கினவர் குலத்தை முதலறக்களையும் எனக்கொர் துணையாகும்," "தனித்துவழி நடக்குமென திடத்துமொரு வலத்து மிருபுறத்து மருகடுத்திரவு பகற்றுணையதாகும்," என்று (வேல்வகுப்பில்) வேலாயுதம் துணை நிற்பதைக் கூறுகிறார் அருணகிரியார்.

சங்கத் தலைமைப் புலவர் நக்கீரர் அருளிய "திருமுரு காற்றுப்படை"க்குப் பின் பத்து (தனிப்) பாடல்கள் உள்ளன. அவற்றுளொன்று "சூர்மார்பும் குன்றுந்தொளைத்த வேலுண்டே துணை" என்கிறது.

அவனன்றி அணுவும் அசையாது. நம்மை ஆட்டுவிப்பவன் ஆண்டவனே. ஆகவே நாம் வாழ, உலகம் உய்ய ஒவ்வொரு வரும் தினமும் ஆண்டவனின் அருட்டுணையை அருளுமாறு உள்ளன்புடன் துதிக்க வேண்டும். அப்படிச் செய்யுமாறு நம் குழந்தைகளையும், நண்பர்களையும், தூண்ட வேண்டும். நிச்சயம் தெய்வம் துணை செய்யும்.

விழிக்குத்துணை திருமென் மலர்ப்பாதங்கள் மெய்மைகுன்று
மொழிக்குத்துணை முருகா எனும் நாமங்கள் முன்பு செய்த
பழிக்குத் துணையவன் பன்னிருதோளும் பயந்ததனி
வழிக்குத்துணை வடிவேலும் செங்கோடன் மயூரமுமே!

(க. அலங்காரம் – 70)

உதிக்கின்ற செங்கதிர் உச்சித்திலகம் உணர்உடையோர்
மதிக்கின்ற மாணிக்கம் மாதுளம்போது — மலர்க்கமலை
துதிக்கின்றமின் கொடிமென் கடிக்குங்கும தோயமென்ன
விதிக்கின்ற மேனிய பிராமியென்றன் விழுத்துணையே!

(அபிராமி அந்தாதி – 1)

முருகா சரணம்!

---

உ

திருச்செந்திலாண்டவன் துணை

# திருவாசக அநுபூதி உரை*

(சீகாழித் தாண்டவராயர் அவர்கள் இயற்றியது)

திருச்சிற்றம்பலம்

## கோயில் திருப்பதிகம்

---

இனி, கோயிற்றிருப்பதிகம்:

மொழிப்புரையநுபூதி:—

முற்பதிகத்தில் அடியார் கொத்துடன் கூட்டுவதே முத்தி யென அருளி, அகமகிழ்ந்து, இப்பதிகத்தில் ஐந்து மலரும் அருளாய் நின்ற முறைமையால், உடலும் உன் கோயிலான அநாதியின்பமுமே கரணமென, எல்லாச் செயலும் சிவன் செய லென, குறைவிலா நிறைவென்றும், குணக்கடலென்றும், அன் பான வின்பப் பெருக்கத்தை அளவளாவி அருளிய சிவஞான ஊதியம் என அருளியதை அருளாற் காண்க.

திருப்பா ஆசிரிய விருத்தம்.

இனி, திருவடியன்பே வீடன்றி, மற்றுளபதம் பாவமென்ற (தி.-ன.) :—

மாறிநின் றென்னை மயக்கிடும் வஞ்சப்
புலனைந்தின் வழியடைத் தமுதே
ஊறிநின் றென்னு ளெழுபரஞ் சோதி
உள்ளவா காணவந் தருளாய்
தேறலின் தெளிவே சிவபெரு மானே
திருப்பெருந் துறையுறை சிவனே
ஈறிலாப் பதங்க[1]ளாயவை கடந்த
இன்பமே யென்னுடை அன்பே.

(தொடர்ச்சி அடுத்த பக்கம் பார்க்க)

---

* இவ்வரிய நூலைப் பதிப்பித்த சென்னை-திருவான்மியூர், மகா மகோபாத்தியாய டாக்டர் உ. வே. சாமிநாதையர் அவர்கள் நூல் நிலையத் தாரின் அனுமதிபெற்று இது வெளியிடப் பெறுகின்றது. இதன் விலை ரூ. 13/- ஷை நூல் நிலையத்தில் கிடைக்கும், 20% கழிவு உண்டு.

# Gora Kumbar and Namadeva

**Professor C. S. Pande**

Saints are a funny lot; they are unpredictable. There have been saints who not only scolded people, but actually beat them. In the case of one such saint, however, people knew that his scolding and beating were a sign of coming success and prosperity to them.

At the beginning of the 14th century there lived a saint named Gora Kumbar (Potter). He was a contemporary of Saint Dnyaneshwar and was the oldest among the saints of that time.

He was respected by all saints and was lovingly called "Chachaji."

Once a party of saints, consisting of Dnyaneshwar, Namadeva and Muktabai was on its way back from a pilgrimage and stayed at Gora Kumbar's place.

---

(முன் பக்கத்தொடர்ச்சி)

(இ - ள்). ஆண்டவனே! தேவரீர், திருவடிக்கண் அன்பின்றி மடித்தாட்டி வஞ்சப் பேரின்பக் கருவியான இந்திரியாதி புலன்கள் ஐம்புல வேடராக என்னை அடிமை....சிவ..................ஞ் செய்து என் போத மென்னை மிகச் செய்து..........நீ வாழ் நாளெல்லாந் தடுத் தாட்டி, இன்பவமிர்தமாக அள்ளூறி நின்றொறா நிற்கும் பரமசிவனே! அநாதியேயுள்ள நாதா! அடியேன் கட்புலப்பட அருடாயோ! சிவாகமக் காட்சியால் தெளிவுடையார் தேனின்ப ஞானத் தெளிவே! பரமசிவனே! திருப்பெருந்துறைக் குருவே! முடிவில்லாத உலகாயதன் முதல் சிவாத்துவித பத வீடு முழுதுமாய் வைக்கப்பாலாய் நின்ற பேரின்ப சொருபமே! அடியேனுள்ளத்தன்பே! ஞானமானவனே! எனவருளியதைக் காண்க.

The saints were sitting together. A wooden moulding stick lay beside them.

"What is that Chachaji?" asked Muktabai, pointing to that stick.

"This is thapi," replied Gora Kumbar. "I test my earthen jars by stroking them with it to find out which one is baked properly and which is not."

Muktabai impishly asked: "We too are like earthen pots. Can you test us with it?"

"Why not?" replied Gora Kumbar and started stroking the head of each saint with the thapi.

While some read a deeper meaning into that action, some others thought it all a fun.

But Namadeva took it as an insult to him and the other saints, and fulminated.

But Gora Kumbar continued his stroking.

Namadeva's turn came. After striking on his head, Gora Kumbar exclaimed: "This pot is unbaked!'

He added in a loving tone: "No doubt you are a saint, but still there is ego in you and it will never die unless you sit under the feet of a Guru."

Namadeva felt piqued and returning to Pandharpur, poured out his vexation before Lord Sri Vithalji.

The Lord replied: "Gora is quite correct. Of course I am always with you, but you will have to be initiated by someone, who will be none else but myself in living body."

At last Namadeva found in Shri Vithoba Khechar his Guru.

Once Dnyaneshwar and Namadeva happened to travel together. After visiting many 'Tirthas' they

proceeded to Rajasthan.

At a distance of about 25 miles from Bikaner there is a place Kaulayatji. At that place both of them became very thirsty, but no water could be seen near about. At last they located a well but were chagrined to find that the well was too deep to descend and contained too little water.

Dnyaneshwar had mastery over 'siddhis' which, however, he utilised very seldom; for he thought they were really obstacles to his spiritual progress.

Seeing no other way, Dnyaneshwar with the help of Laghima-siddhi (becoming tiny and light), descended in to the well and quenched his thirst with a little water from a chink.

Coming up he asked Namadeva: "Should I bring you some water too?"

"A saint should not drink water brought by somebody else," replied Namadeva; "My Vithalji will give me water."

So saying he sang a devotional prayer to his Lord

It did not take long for the well to become full with water, and even overflow.

Namadeva drank that water and thanked his Lord Vithal.

Dnyaneshwar was overjoyed at the sight and said to Namadeva: "Only for this reason have I accompanied you. Really you are great. By your firm devotion you have made Lord Vithal your own. Hail to you and to your ancestors!"

---

The above article is reproduced with the kind permission of the Editor, Bhavan's Journal.

# பிரார்த்தனை

இராகம்:- நாட்டைக்குறிஞ்சி தாளம்:- ஆதி

பல்லவி

என்தன் உள்ளத்தில் வளர் இடர்தரும் தீமையை
எழில்முருகையா எடுத்தெறிவாய் (என்தன்)

அனுபல்லவி

இன்பந் துன்பங்கண்டு விருப்பு வெறுப்புறுமல்
இருந்திடவே நல்ல இதயம் அளித்திடுவாய் (என்தன்)

சரணம்

என்வாழ்வோ மிக்க ஏற்றமுற் றிருக்க
எண்ணும் நிலையெனக்கு ஏற்படா திருக்க
தன்னலமே இன்றிச் சமயநல் வாழ்வுக்கே
சேவைபுரிய – மனம் தந்தருள் நீ யெனக்கே! (என்தன்)

நன்மைதருஞ் ஞான மார்க்கத்தின் ஒழுக்க
நெறியினைப் பின்பற்றிச் சென்றுமே சிறக்க
பொன்றுப் புகழ்தரும் பண்புகள் எனக்கே
பைந்தமிழ் வேலவனே பரிவுடன்வந் தருள்க! (என்தன்)

இங்ஙனம்,
வி. மு. உலகநாதன்.

---

உ

சிவ சிவ

# திருக்குற்றாலத்தில் திருக்குற்றாலநாதர் மகா சிவராத்திரி நிதி ரூ. 1500/-

"கடல்புன வாயில்கொடுங் குன்றுபரங்குன்று
குற்றாலம் ஆப்பனூர் பூவணநெல் வேலி
ஏடகம்ஆடானைதிருக் கானப்பேர் சுழியல்

இராமேசம், திருப்புத்தூர் இவை முதலாந் தலங்கள்" என்று மதுரை மீனாட்சியம்மை குறத்தில் குறிக்கப் பெற்றவாறு பாண்டிநாட்டுப் பாடல் பெற்ற தலங்களுள் ஒன்றாய் விளங்கு வதும்,

'வம்பார் குன்றம் நீடுயர் சாரல் வளர்வேங்கைக்
கொம்பார் சோலைக் கோலவண்டியாழ் செய் குற்றாலம்'

என்று தொடங்கும் பதிகத்தால் தலமும், 'திருந்தமதிசூடி' என்ற பதிகத்தால் தலவிருக்ஷமும் ஞானசம்பந்தரால் பாடப் பெற்ற பெருமையுடையதும், திருநாவுக்கரசர் திருவங்கமாலை யில், 'உற்றா ராருளரோ - உயிர், கொண்டுபோம்பொழுது, குற்றாலத்துறை கூத்தனல்லால் நமக்குற்றாராருளரோ' என்றும் 'குற்றாலத்தமர்ந்துறையும் கூத்தன் கண்டாய்' என்றும் பாடப் பெற்ற தலமாயதும்,

'குற்றாலத்தமர்ந்துறையுங் கூத்தாவுன் குரைகழற்கே
கற்றாவின் மனம் போலக் கசிந்துருக வேண்டுவனே'

என்று மாணிக்கவாசகரால் திருவாசகத்துப் புகலப்பெற்றதும்,

'துளபக்குன்றைக் கொன்றை முடிக்குன்றமாக்கும் தொன்ன கரம்' என்று திருவிளையாடற் புராணத்துக் குறிக்கப் பெற்ற தும், பஞ்ச சபைகளுள் ஒன்றாகிய சித்திர சபையையுடையதும் ஆன திருக்குற்றாலத்தில் திருக்குற்றாலநாதசுவாமி கோயிலில், மாசி மாதத்தில் வரும் மகா சிவராத்திரி நாளில், ஒரு காலத்தில் மட்டும் விசேஷ அபிஷேக நைவேத்தியங்கள் நடத்துவித்தற் பொருட்டுத் திருப்பனந்தாள் ஸ்ரீ காசி மடத்து அதிபர் ஸ்ரீலஸ்ரீ காசிவாசி அருள்நந்தித் தம்பிரான் சுவாமிகள் அவர்களால் இத்தரும

நிதி நிறுவப் பெற்றது. இது 'திருக்குற்ருலத்தில் திருக்குற்ருல நாதர் மகா சிவராத்திரி நிதி' எனப் பெயர் பெறும்.

2. இதற்குரிய முதற்பொருள் ரூ 1500/- இது ஆண்டொன்றுக்கு 7% வட்டி தரக் கூடிய நிலையான முதலீடாகக் கும்பகோணம் ஸ்டேட் பாங்கில் முதலீடு செய்யப் பெற்றுள்ளது. பிக்சட் டிபாஸிட் இரசீது நெ. ஏ. 693171 – 7% – தேதி. 20—2—66 மாதங்கள் 60 – ரூ. 1500/-/ ஆயிரத்தைந்நூறு/ இது நம்மாலும் நமக்குப் பின் உரிமையுள்ளவர்களாலும் பரிபாலனஞ் செய்யப் பெற்று வரும்.

3, இம்முதற் பொருளினின்று ஆண்டுதோறும் கிடைக்கும் வட்டித் தொகையில் நிர்வாகச் செலவுகள் போக எஞ்சிய தொகை முழுவதும் திருக்குற்ருலநாதர் கோயில் கொண்டருளியுள்ள திருக்குற்ருலநாதர் ஆகிய சிவலிங்கப்பெருமானுக்கு, மாசி மகாசிவராத்திரி நாளில், ஒரு யாமத்தில் மட்டும் விசேஷ அபிஷேக ஆராதனைகள் நடத்துவிக்கப் பயன்படுத்தப் பெறும்,

4. இவ்வட்டி வருமானம் வேறு எம்முறையிலும் பயன்படுத்தம் பெற மாட்டாது.

5. இம்முதற் பொருள் நம்பேரிலும் நமக்குப்பின் உரிமையுள்ளவர்கள் பேரிலும் இருந்து வரும். இம்முதற்பொருள் திரும்பியளிக்கப் பெற்றதும் அதிக வட்டி தரக்கூடிய அரசியல் கடன் தாள்களிலோ அல்லது நிலையான முதலீடுகளிலோ முதலீடு செய்யப் பெறும்.

'குற்ருலத் தெம் கூத்தா போற்றி' – திருவாசகம்

Tirupanandal<br>Dated 21-2-1967 } (Sd.) *Kasivasi Arulnandi Tambiran.*

---

Registered at Tiruvadamarudhur Sub Registrar's office on 23-2-67 as No. 5 of 1967 of Book 4, volume 53, pages 241 to 24.3

## கலைக்கோயிலில் வரப்பெற்றுக்கொண்ட புத்தகங்களின் விபரம் (தொடர்ச்சி)

| தொடர் எண் | புத்தகத்தின் பெயர் | ஆசிரியரின் பெயர் |
|---|---|---|
| 11263 | சிவப்பிரகாசம் சிர்மைக்கட்டுரை | திருவாவடுதுறை ஆதீனம் |
| 11264 | சைவானுட்டான விளக்கம் | வித்துவான், தி. பட்டுசாமி ஓதுவார் |
| 11265 | ஏர் எழுபதும் திருக்கை வழக்கமும் | ஆ. இராமச்சந்திரன், செந்தமிழ்க் கல்லூரி, திருப்பனந்தாள் |
| 11266 to 67 | தடைகளும் விடைகளும் | மறைமலையடிகள் மன்றம் வெளியீடு |
| 11268 | தில்லைச் சிற்றம்பலவன் கோயில் (சிதம்பரம் தல வரலாறு) | M J.சோமசுந்தரம்பிள்ளைB. A., B L ,ஆசிரியர் |
| 11269 | ஸ்ரீ பரார்த்த நித்திய பூஜாவிதி (வெளியீடு) | சிவாகம சித்தாந்த பரிபாலன சங்கம், தேவகோட்டை |
| 11270 to 71 | மதுரைச் சொக்கநாதர் தமிழ்விடுதூது | டாக்டர் உ. வே. சாமிநாதய்யர் (பதிப்பாசிரியர்) |
| 11272 | புலவராற்றுப்படை (ஆசிரிய) | வித்துவான். வே. ரா. தெய்வசிகாமணி சென்னிமலைத்தலபுராணவெளியீட்டுக்குழுவினர் |
| 11273 | விநாயகர் அநுபூதி | புலவர். க. இரா. கு. தமிழேந்தியார் |
| 11274 | இந்துசமய உண்மைகளை உலகுணரச் செய்யும்வழி | இந்து தர்ம பிரசார சங்க வெளியீடு |
| 11275 | கந்தபுராணப் போற்றிக் கலிவெண்பா | சம்பந்த சரணாலயத் தம்பிரான் சிவக்கவி மணி. C. K. சுப்பிரமணிய முதலியார் B. A., இயற்றியது |

| | | |
|---|---|---|
| 11276 | நித்திய பாராயணத்திரட்டு (வெளியிட்டோர்) | தே. பா. அ. அருணாசலம் செட்டியார் |
| 11277 | தேவாரத் திருப்பதிகங்கள் (பதிப்பாசிரியர்) | ஸ்ரீலஸ்ரீ முத்துக்குமாரசுவாமித் தம்பிரான் அவர்கள், ஜூனியர், ஸ்ரீ காசிமடம், திருப்பனந்தாள். |
| 11278 to 79 | வழிபாட்டு பாராயணத்திரட்டு | ச. ராஜகணபதி பிள்ளை, காரைக்கால் |
| 11280 | திருமுறைச்செல்வம் | ந. வீ. செயராமன், விரிவுரையாளர் அண்ணாமலை பல்கலைக்கழகம் |
| 11281 | உண்டா? இல்லையா? | திருவாவடுதுறை ஆதீனம் |
| 11282 to 83 | பஞ்ச சபைகளும் – அருட்பாடல்களும் | கயப்பாக்கம் திரு. சோமசுந்தரம் செட்டியார் (தொகுத்தவர்) |
| 11284 | திருமுகப் பாசுரமும் காரைக்கால் அம்மையார் பிரபந்தமும் | தருமையாதீனம் |
| 11285 | 1966ம் வருட குமரகுருபரன் ஆண்டுமலர் | |
| 11286 to 87 | திருமந்திர கட்டுரை (மூன்றாம் தந்திரம் ஏழாம் பகுதி) கலை நிலை | திருவாவடுதுறை ஆதீனம் |
| 11288 to 89 | சிவப்பிரகாசம் (பொழிப்புரையுடன்) | ஷை |
| 11290 to 91 | திருமந்திரம் (ஏழாம் தந்திரம் பிற்பகுதி பஞ்சாக்ஷரதீபம் என்னும் உரையுடன்) | ஷை |
| 11292 | ஆளுடைய பிள்ளையார் திருவந்தாதி | ஷை |
| 11293 | திருத்தொண்டர் திருவந்தாதி | ஷை |

| | | |
|---|---|---|
| 11294 | சோடச விநாயகர் ஸ்துதிமாலை | ராமேஸ்வரம் ஸ்ரீ ஆசி சங்கரர் விமான மண்டபத்தில் ஷோடசவிநாயகர் பிரதிஷ்டை நினைவு வெளியீடு |
| 11295 | திருமூலநாயனார் அருளிய திருமந்திரத்திரட்டு | (ஆருத்ராதரிசன இலவச வெளியீடு) |
| 11296 | சைவசித்தாந்த சிறுநூல்கள் | மு. அருணாசலம் |
| 11297 | இறைஞானபோதம் | சிலஸ்ரீ மீனாட்சி சுந்தர தேசிக பரமாச்சாரிய சுவாமிகள் அவர்கள் |
| 11298 | சைவானுட்டான விளக்கம் | ஆசிரியர். வித்துவான் தி. பட்டுச்சாமி ஓதுவார் |
| 11299 | தேவாரத் தலகுறிப்புக்கள் (தென்னார்காடு) | தொகுத்தவர் தி. கே. நாராயணசாமி |
| 11300 | ஸ்ரீ தக்ஷிணாமூர்த்தி தோத்திரம் | இளையான்குடி வேதாந்த மடம் |
| 11301 | ஸ்ரீ கொடுமனூர் உடையடிக் குமரன் திருப்புகழ் | இளையான்குடி வேதாந்த மடம் ஸ்ரீ சிவானந்த சுவாமிகள் அருளியது |
| 11302 | வாளவந்தம்மன் துதி | ஷெ |
| 11303 | சைவசித்தாந்த சிறுநூல்கள் | சைவசித்தாந்த மகா சமாஜச் செயலாளர் நாராயணசாமி நாயுடு மணிவிழா மலர் |
| 11304 | சைவானுட்டான விளக்கம் | வித்துவான் தி. பட்டுச்சாமி ஓதுவார் |
| 11305 | தேவாரத் தலக்குறிப்புக்கள் (தென்னார்காடு) | தொகுத்தவர் தி. கி. நாராயணசாமி |

---

(தொடரும்)

| ஆவணி | கிழமை | செப்டம்பர் | 1967 செப்டம்பர் மீ<br>பிலவங்க ஆவணி – புரட்டாசி |
|---|---|---|---|
| 28 | புதன் | 13 | |
| 29 | வியாழன் | 14 | |
| 30 | வெள்ளி | 15 | |
| 31 | சனி | 16 | பிரதோஷம் - திருப்பனந்தாள் ஸ்ரீ அருணசடேசுவரர் பிரதோஷக்கட்டளை. |
| புரட்டாசி | | செப்டம்பர் | புரட்டாசி மீ<br>ஸ்ரீ 1. காசியில்: குமாரசுவாமி மடத்தில் ஸ்ரீ குமரகுருபர சுவாமிகள் நினைவு அன்னம்பாலிப்பு.<br>2. ஸ்ரீ உருத்திர பசுபதியார் நினைவு அன்னம்பாலிப்பு. |
| 1 | ஞாயிறு | 17 | |
| 2 | திங்கள் | 18 | ○ பௌர்ணமி |
| 3 | செவ்வாய் | 19 | |

| புரட்டாசி | கிழமை | செப்டம்பர் | 1967 செப்டம்பர் மீ பிலவங்க ஹு — புரட்டாசி |
|---|---|---|---|
| 4 | புதன் | 20 | |
| 5 | வியாழன் | 21 | |
| 6 | வெள்ளி | 22 | |
| 7 | சனி | 23 | |
| 8 | ஞாயிறு | 24 | * கிருத்திகை<br>வேளூர் ஸ்ரீ முத்துக்குமாரசுவாமி சந்தனுபிஷேகமும் திருமஞ்சனப் பரிசும்.<br>காஞ்சிபுரம் – திருவேகம்பப்பெருமானுக்குப் புனுகு தைலாபிஷேகம். |
| 9 | திங்கள் | 25 | |
| 10 | செவ்வாய் | 26 | |
| 11 | புதன் | 27 | |

| புரட்டாசி | கிழமை | செப்டம்பர் | 1967 செப்டம்பர் மீ பிலவங்க புரட்டாசி – ஐப்பசி |
|---|---|---|---|
| 12 | வியாழன் | 28 | |
| 13 | வெள்ளி | 29 | |
| 14 | சனி | 30 | |
| புரட்டாசி | | அக்டோபர் | 1967 அக்டோபர் மீ பிலவங்க புரட்டாசி – ஐப்பசி |
| 15 | ஞாயிறு | 1 | பிரதோஷம் - திருப்பனந்தாள் ஸ்ரீ அருணசடேசுவரர் பிரதோஷக் கட்டளை. |
| 16 | திங்கள் | 2 | |
| 17 | செவ்வாய் | 3 | ● மஹாளய அமாவாசை |
| 18 | புதன் | 4 | நவராத்திரி தொடக்கம் |
| 19 | வியாழன் | 5 | |

| புரட்டாசி | கிழமை | அக்டோபர் | 1967 அக்டோபர் ௴<br>பிலவங்க ௵ புரட்டாசி – ஐப்பசி |
|---|---|---|---|
| 20 | வெள்ளி | 6 | |
| 21 | சனி | 7 | |
| 22 | ஞாயிறு | 8 | |
| 23 | திங்கள் | 9 | |
| 24 | செவ்வாய் | 10 | |
| 25 | புதன் | 11 | சரஸ்வதி பூஜை |
| 26 | வியாழன் | 12 | விஜயதசமி |
| 27 | வெள்ளி | 13 | |
| 28 | சனி | 14 | |

| புரட்டாசி | கிழமை | அக்டோபர் | 1967 அக்டோபர் மீ<br>பிலவங்க ஹு – புரட்டாசி–ஐப்பசி |
|---|---|---|---|
| 29 | ஞாயிறு | 15 | பிரதோஷம் – திருப்பனந்தாள் ஸ்ரீ அருண சடேசுவரர் பிரதோஷக் கட்டளை. |
| 30 | திங்கள் | 16 | நடராசாபிஷேகம் |
| 31 | செவ்வாய் | 17 | |
| ஐப்பசி | | அக்டோபர் | ஐப்பசி<br>ஸ்ரீ காசியில்: குமாரசாமி மடத்தில் திருமூல நாயனுர் நினைவு அன்னம் பாலிப்பு.<br>ஷ நெடுமாற நாயனுர் நினைவு அன்னம் பாலிப்பு.<br>ஷ பூசலார் நாயனுர் நினைவு அன்னம் பாலிப்பு.<br>இராமேசுவரத்தில்: ஸ்ரீ காசி மடத்தில் ஸ்ரீ குமரகுருபர சுவாமிகள் நினைவு அன்னம் பாலிப்பு. |
| 1 | புதன் | 18 | ○ பௌர்ணமி |
| 2 | வியாழன் | 19 | |
| 3 | வெள்ளி | 20 | |

| ஐப்பசி | கிழமை | அக் டோபர் | 1967 அக்டோபர் மீ பிலவங்க ஹூ — ஐப்பசி |
|---|---|---|---|
| 4 | சனி | 21 | * கிருத்திகை. வேளூர் ஸ்ரீ முத்துக்குமார சுவாமி சந்தன பிஷேகமும் திருமஞ்சனப் பரிசும். |
| 5 | ஞா யிறு | 22 | காஞ்சிபுரம் திருவேகம்பப் பெருமானுக்குப் புனுகு தைலாபிஷேகம். |
| 6 | திங் கள் | 23 | |
| 7 | செவ் வாய் | 24 | |
| 8 | புதன் | 25 | |
| 9 | வியா ழன் | 26 | |
| 10 | வெ ள்ளி | 27 | |
| 11 | சனி | 28 | |
| 12 | ஞா யிறு | 29 | |

| ஐப்பசி | கிழமை | அக்டோபர் | 1967 அக்டோபர் மீ<br>பிலவங்க ஸு — ஐப்பசி |
|---|---|---|---|
| 13 | திங்கள் | 30 | |
| 14 | செவ்வாய் | 31 | பிரதோஷம் – திருப்பனந்தாள் ஸ்ரீ அருணசடேசுவரர் பிரதோஷக் கட்டளை. |

| ஐப்பசி | | நவம்பர் | 1967 நவம்பர் மீ<br>பிலவங்க ஐப்பசி – கார்த்திகை |
|---|---|---|---|
| 15 | புதன் | 1 | ● அமாவாசை: தீபாவளிப்பண்டிகை திருப்பனந்தாள் ஸ்ரீ அருணசடேசுவரர், திருலோக்கி ஸ்ரீசுந்தரேசுவரர், திருவாப்பாடி ஸ்ரீ பாலுகந்தநாதர் - தீபாவளிக் கட்டளை ( R. C. ) |
| 16 | வியாழன் | 2 | 2 – முதல் 7உ மதுரையிலும், காஞ்சியிலும் கந்தபுராணப் பிரசங்கங்கள். (திருவண்ணாமலையில் கந்தபுராண படன பூர்த்தியும், இன்னொரு தலத்தில் கந்தபுராண படனம் தொடங்கு வித்தலும் |
| 17 | வெள்ளி | 3 | |
| 18 | சனி | 4 | |
| 19 | ஞாயிறு | 5 | |

| ஐப்பசி | கிழமை | நவம்பர் | 1967 நவம்பர் மீ<br>பிலவங்க ஐப்பசி – கார்த்திகை |
|---|---|---|---|
| 20 | திங்கள் | 6 | |
| 21 | செவ்வாய் | 7 | ஸ்கந்தசஷ்டி: திருச்செந்தூரில் ஸ்ரீ குமர குருபர சுவாமிகள் நினைவு கந்தர் சஷ்டி நாளில் அன்னம் பாலிப்பு. |
| 22 | புதன் | 8 | |
| 23 | வியாழன் | 9 | |
| 24 | வெள்ளி | 10 | |
| 25 | சனி | 11 | |
| 26 | ஞாயிறு | 12 | |
| 27 | திங்கள் | 13 | |
| 28 | செவ்வாய் | 14 | பிரதோஷம். திருப்பனந்தாள் ஸ்ரீ அருண சடேசுவரர் பிரதோஷக் கட்டளை. |

| ஐப்பசி | கிழமை | நவம்பர் | 1967 நவம்பர் மீ<br>பிலவங்க ஐப்பசி – கார்த்திகை |
|---|---|---|---|
| 29 | புதன் | 15 | |
| 30 | வியாழன் | 16 | திருச்சேய்நலூரிலும், கங்கைகொண்ட சோழபுரத்திலும் அன்னபிஷேகம் ( R. C. )<br>விளநகரில் துறைகாட்டும் வள்ளலார் கோயில் அன்னபிஷேகம்.<br>◯ பௌர்ணமி: சர்வாலயதீயம்:<br>டிசம்பர் 14உ பார்க்க. கடைமுகம் |
| கார்த்திகை | | நவம்பர் | கார்த்திகை மீ<br>ஸ்ரீ காசியில்: குமாரசாமி மடத்தில் கச்சியப்பர் நினைவு அன்னம் பாலிப்பு.<br>ஷ ஆயனர் நினைவு அன்னம் பாலிப்பு.<br>ஷ கார்வேட்நகர் K. T. K. இராஜா நினைவு அன்னம் பாலிப்பு.<br>திருவண்ணமலையில்: நெய்விளக்கு (கார்த்திகை, மார்கழி, தை மாதங்களில்) |
| 1 | வெள்ளி | 17 | * கிருத்திகை<br>வேளூர் ஸ்ரீ முத்துக்குமாரசுவாமி சந்தனபிஷேகமும் திருமஞ்சனப் பரிசும். |
| 2 | சனி | 18 | |
| 3 | ஞாயிறு | 19 | |
| 4 | திங்கள் | 20 | |

| கார்த்திகை | கிழமை | நவம்பர் | 1967 நவம்பர் மீ<br>பிலவங்க ஞு — கார்த்திகை |
|---|---|---|---|
| 5 | செவ்வாய் | 21 | |
| 6 | புதன் | 22 | |
| 7 | வியாழன் | 23 | |
| 8 | வெள்ளி | 24 | |
| 9 | சனி | 25 | |
| 10 | ஞாயிறு | 26 | காஞ்சிபுரம் திருவேகம்பப் பெருமானுக்குப் புனுகு தைலாபிஷேகம். |
| 11 | திங்கள் | 27 | திருவாப்பாடி, கங்கைகொண்ட சோழபுரம் – கார்த்திகை இரண்டாவது சோமவாரம் ( R. C. ) |
| 12 | செவ்வாய் | 28 | |
| 13 | புதன் | 29 | பிரதோஷம் – திருப்பனந்தாள் ஸ்ரீ அருணசடேசுவரர் பிரதோஷக் கட்டளை. |

| கார்த் திகை | கிழமை | நவம்பர் | 1967 நவம்பர் மீ பிலவங்க – கார்த்திகை |
|---|---|---|---|
| 14 | வியா ழன் | 30 | |

| கார்த் திகை | | டிசம்பர் | 1967 டிசம்பர் மீ பிலவங்க கார்த்திகை – மார்கழி |
|---|---|---|---|
| 15 | வெள் ளி | 1 | ● அமாவாசை |
| 16 | சனி | 2 | |
| 17 | ஞா யிறு | 3 | |
| 18 | திங் கள் | 4 | திருக்கடவூர் கார்த்திகை மூன்ருவது சோம வாரம். |
| 19 | செவ் வாய் | 5 | 5உ முதல் 14உ முடிய திருவண்ணமலையில் திருக்கார்த்திகைப் பெருவிழாவில் தேவார கோஷ்டி. |
| 20 | புதன் | 6 | |
| 21 | வியா ழன் | 7 | |
| 22 | வெள் ளி | 8 | |

| கார்த்திகை | கிழமை | டிசம்பர் | 1967 டிசம்பர் மீ<br>பிலவங்க ஞு — கார்த்திகை |
|---|---|---|---|
| 23 | சனி | 9 | |
| 24 | ஞாயிறு | 10 | |
| 25 | திங்கள் | 11 | |
| 26 | செவ்வாய் | 12 | |
| 27 | புதன் | 13 | |
| 28 | வியாழன் | 14 | * கிருத்திகை<br>பிரதோஷம் – திருப்பனந்தாள் ஸ்ரீ அருணசடேசுவரர் பிரதோஷக் கட்டளை.<br>திருவண்ணுமலை ஸ்ரீ குமரகுருபர சுவாமிகள் நினைவு திருக்கார்த்திகை நாள் அன்னம் பாலிப்பு.<br>காஞ்சிபுரம் திருவேகம்பப் பெருமானுக்குப் புனுகு தைலாபிஷேகம்.<br>வேளூர்: ஸ்ரீ முத்துக்குமாரசுவாமி சந்தனுபிஷேகமும் திருமஞ்சனப் பரிசும். |
| 29 | வெள்ளி | 15 | |

| மார்கழி | கிழமை | டிசம்பர் | 1967 டிசம்பர் மீ<br>பிலவங்க ஹூ — மார்கழி |
|---|---|---|---|
| மார்கழி | | டிசம்பர் | மார்கழி மீ<br>ஸ்ரீ காசியில் குமாரசாமி மடத்தில்: ஸ்ரீ குமர குருபர சுவாமிகள் நினைவு அன்னம் பாலிப்பு. இராமேசுவரத்தில் ஸ்ரீ காசி மடத்தில்: ஸ்ரீ குமரகுருபர சுவாமிகள் நினைவு அன்னம் பாலிப்பு.<br>தருமபுர ஆதீன ஸ்ரீசொக்கநாதர், திருவாவடு துறை ஆதீன ஸ்ரீ நமச்சிவாயமூர்த்தி, சூரிய ஞர் கோயில் ஸ்ரீ சிவாக்கிரக யோகிகள், கும்பகோணம் ஸ்ரீ சங்கராச்சாரிய சுவாமிகள் மடம் ஸ்ரீ சந்திரமௌலீசுவரர் – தனுர்மாச பூசை (R. C.)<br>சுசீந்திரம்: ஸ்ரீ தாணுமாலயப் பெருமான் கோயிலில் மார்கழித் திருவிழாவில் (1) 3-ஆம் திருநாள் மண்டகப்படி; (2) 7-ஆம் திருநாள் மண்டகப்படி; (3) தேவார கோஷ்டி (மூன்று நாட்கள்); (4) பிராமண போசனம் மகேசுவர பூசை. |
| 1 | சனி | 16 | ○ பௌர்ணமி<br>திருவொற்றியூர் படம்பக்க நாதருக்குப்புனுகு தைலாபிஷேகம் |
| 2 | ஞாயிறு | 17 | தனுர்மாச பூசை ஆரம்பம் |
| 3 | திங்கள் | 18 | |
| 4 | செவ்வாய் | 19 | |

| மார்கழி | கிழமை | டிசம்பர் | 1967 டிசம்பர் மீ<br>பிலவங்க – மார்கழி |
|---|---|---|---|
| 5 | புதன் | 20 | |
| 6 | வியாழன் | 21 | |
| 7 | வெள்ளி | 22 | |
| 8 | சனி | 23 | |
| 9 | ஞாயிறு | 24 | காஞ்சிபுரத்தில் ஸ்ரீ ஏகாம்பர நாதர்க்குப் புனுகு தைலாபிஷேகம் |
| 10 | திங்கள் | 25 | |
| 11 | செவ்வாய் | 26 | |
| 12 | புதன் | 27 | |
| 13 | வியாழன் | 28 | பிரதோஷம் - திருப்பனந்தாள் ஸ்ரீ அருண சடேசுவரர் பிரதோஷக் கட்டளை. |

| மார்கழி | கிழமை | டிசம்பர் | 1967 டிசம்பர் மீ<br>பிலவங்க – மார்கழி |
|---|---|---|---|
| 14 | வெள்ளி | 29 | |
| 15 | சனி | 30 | ● அமாவாசை |
| 16 | ஞாயிறு | 31 | |

| மார்கழி | | ஜனவரி | 1968 ஜனவரி மீ<br>பிலவங்க மார்கழி – தை |
|---|---|---|---|
| 17 | திங்கள் | 1 | |
| 18 | செவ்வாய் | 2 | |
| 19 | புதன் | 3 | |
| 20 | வியாழன் | 4 | |
| 21 | வெள்ளி | .5 | முதல் 14-உ வரை சிதம்பரத்தில் திருவாதிரைத் திருவிழா நாட்களில் தில்லைவாழந்தணர் விசேஷ அன்னம்பாலிப்பு. |

| மார்கழி | கிழமை | ஜனவரி | 1968 ஜனவரி மீ பிலவங்க ஹூ – மார்கழி |
|---|---|---|---|
| 22 | சனி | 6 | |
| 23 | ஞாயிறு | 7 | |
| 24 | திங்கள் | 8 | |
| 25 | செவ்வாய் | 9 | |
| 26 | புதன் | 10 | |
| 27 | வியாழன் | 11 | * கிருத்திகை<br>வேலூர் ஸ்ரீ முத்துக்குமாரசுவாமி சந்தனாபிஷேகமும் திருமஞ்சனப் பரிசும்<br>வைகுண்ட ஏகாதசி |
| 28 | வெள்ளி | 12 | |
| 29 | சனி | 13 | சிதம்பரம் 1. திருவாதிரைத் திருத்தேர் விழா மகேசுவர பூசை<br>2. திருவாதிரைத் திருத்தேர் விழா திருப்பல்லாண்டு<br>பிரதோஷம் - திருப்பனந்தாள் ஸ்ரீ அருணசடேசுவரர் பிரதோஷக் கட்டளை |

| தை | கிழமை | ஜனவரி | 1968 ஜனவரி மீ<br>பிலவங்க ௵ — தை |
|---|---|---|---|
| 30 | ஞாயிறு | 14 | ஆருத்ராதரிசனம் சிதம்பரம் ஸ்ரீ காசி மடத்தில் அன்னம்பாலிப்பு<br>சிதம்பரம் தில்லைவாழந்தணர் மார்கழித் திருவாதிரைத் திருமஞ்சனப் பரிசு<br>உத்தரகோசமங்கையில் பட்டர் மார்கழித் திருவாதிரைப் படிக்காசு<br>திருச்சேய்நலூர் திருவாதிரைச்சிறப்பு (R. C.)<br>மன்னார்குடி இராசகோபாலசுவாமி திருவிழா இராப்பத்து உற்சவத்தில் ஒருநாள் மண்டகப்படி (R. C.)<br>போகிப்பண்டிகை |
| தை | | ஜனவரி | தை மீ<br>ஸ்ரீ காசியில் - குமாரசாமி மடத்தில் சண்டேசுவரர் நினைவு அன்னம்பாலிப்பு<br>இராமேசுவரத்தில் - ஸ்ரீ காசி மடத்தில்: காளத்திராஜா வெங்கடப்ப நாயுடுவாரு நினைவு அனனம்பாலிப்பு<br>சிதம்பரத்தில் - தில்லைவாழந்தணர் விசேஷ அன்னம்பாலிப்பு (ஒருநாள்) |
| 1 | திங்கள் | 15 | ○ பௌர்ணமி பொங்கல் பண்டிகை<br>உத்தராயணபுண்யகாலம் |
| 2 | செவ்வாய் | 16 | மாட்டுப் பொங்கல் |
| 3 | புதன் | 17 | |
| 4 | வியாழன் | 18 | |

| தை | கிழமை | ஜனவரி | 1968 ஜனவரி மீ<br>பிலவங்க – தை |
|---|---|---|---|
| 5 | வெள்ளி | 19 | தை-மீ முதல் வெள்ளி – சீகாழிச் சட்டைநாதர் புனுகு நெய் சார்த்துதல். |
| 6 | சனி | 20 | |
| 7 | ஞாயிறு | 21 | |
| 8 | திங்கள் | 22 | |
| 9 | செவ்வாய் | 23 | |
| 10 | புதன் | 24 | |
| 11 | வியாழன் | 25 | |
| 12 | வெள்ளி | 26 | ஸ்ரீ காசியில் குடியரசுதினம் அன்னம் பாலிப்பு |
| 13 | சனி | 27 | பிரதோஷம் - திருப்பனந்தாள் ஸ்ரீ அருணசடேசுவரர் பிரதோஷக் கட்டளை. |

| தை | கிழமை | ஜனவரி | 1968 ஜனவரி மீ<br>பிலவங்க – தை |
|---|---|---|---|
| 14 | ஞா யிறு | 28 | காஞ்சிபுரத்தில் ஸ்ரீஏகாம்பரநாதர்க்குப் புனுகு தைலாபிஷேகம் |
| 15 | திங் கள் | 29 | ● தை அமாவாசை காவிரிப்பூம்பட்டினத் திலும் இராமேசுவரத்திலும் அன்னம் பாலிப்பு |
| 16 | செவ் வாய் | 30 | ஸ்ரீ காசியில் மகாத்மா காந்தி நினைவு அன்னம் பாலிப்பு. கன்னியாகுமரி – ஸ்ரீ கன்னியாகுமரியம்மன் தைச்சிறப்பு. |
| 17 | புதன் | 31 | |

| தை | | பிப்ரவரி | 1968 பிப்பிரவரி மீ<br>பிலவங்க – தை – மாசி |
|---|---|---|---|
| 18 | வியா ழன் | 1 | |
| 19 | வெள் ளி | 2 | |
| 20 | சனி | 3 | |
| 21 | ஞா யிறு | 4 | |

| தை | கிழமை | பிப்ரவரி | 1968 பிப்ரவரி மீ<br>பிலவங்க தை — மாசி |
|---|---|---|---|
| 22 | திங்கள் | 5 | ரதசப்தமி: திருவாவடுதுறை ஆதிநமச்சிவாய மூர்த்தி குருபூசை.<br>ரதசப்தமி - சிதம்பரம் ஸ்ரீ நடராஜப்பெருமான் கோயிலிலும் திருவல்லிக்கேணி ஸ்ரீ பார்த்த சாரதி கோயிலிலும் ரத சப்தமி (R.C.) |
| 23 | செவ்வாய் | 6 | |
| 24 | புதன் | 7 | * கிருத்திகை வேளூர் - ஸ்ரீ முத்துக்குமார சுவாமி சந்தனு பிஷேகமும் திருமஞ்சனப் பரிசும். |
| 25 | வியாழன் | 8 | |
| 26 | வெள்ளி | 9 | |
| 27 | சனி | 10 | |
| 28 | ஞாயிறு | 11 | பிரதோஷம் - திருப்பனந்தாள் ஸ்ரீ அருண சடேசுவரர் பிரதோஷக்கட்டளை |
| 29 | திங்கள் | 12 | தைப்பூசம் - திருவிடைமருதூரில் அன்னம் பாலிப்பும், கஞ்சிவார்த்தலும், தைப்பூசம் திருமுறை விழாவும் (R. C.) |

| தை | கிழமை | பிப்ரவரி | 1968 பிப்ரவரி மீ<br>பிலவங்க ஹூ — தை-மாசி |
|---|---|---|---|
| | | | தைப்பூசம் - மதுரையில் சொக்கலிங்கம் சந்தன மெய்ப்பூச்சு<br>இராமேசுவரத்தில் வெங்கிட்டராம சிரௌதிகள் நினைவு அன்னம்பாலிப்பு<br>வடலூர் செல்லும் தைப்பூச கோஷ்டிகளுக்கு அன்னம்பாலிப்பு (R. C.) |
| மாசி | | பிப்ரவரி | மாசி மீ<br>ஸ்ரீ காசியில் குமாரசாமிமடத்தில்: 1) தருமை ஸ்ரீ மாசிலாமணி தேசிகர் நினைவு அன்னம்பாலிப்பு<br>2) கோச்செங்கட்சோழர் நினைவு அன்னம்பாலிப்பு<br>3) காசிமடம் 14-ஆவது அதிபர் ஸ்ரீ காசிவாசி இராமலிங்க சுவாமிகள் நினைவு அன்னம்பாலிப்பு<br>4) காரி நாயனுர் நினைவு அன்னம்பாலிப்பு<br>இராமேசுவரத்தில் ஸ்ரீ காசி மடத்தில்: கோச்செங்கட் சோழர் நினைவு அன்னம்பாலிப்பு<br>சிதம்பரத்தில்: தில்லைவாழந்தணர்களுக்குச் சிறப்பு அன்னம்பாலிப்பு (ஒருநாள்) |
| 1 | செவ்வாய் | 13 | ○ பௌர்ணமி |
| 2 | புதன் | 14 | |
| 3 | வியாழன் | 15 | |
| 4 | வெள்ளி | 16 | மாசி உத்திரம் - சென்னை மயிலாப்பூரில் திருவள்ளுவர் நினைவு அன்னம்பாலிப்பு |

| மாசி | கிழமை | பிப்ரவரி | 1968 பிப்ரவரி மீ<br>பிலவங்க – மாசி |
|---|---|---|---|
| 5 | சனி | 17 | மாசி மகா சிவராத்திரி விழாத் தொடக்கம் திருக்காளத்தியில் நடக்கும் மகா சிவராத்திரிப் பெருவிழாவில் ஆறு நாட்கள் திருமுறைக்கோஷ்டி; கிரிப் பிரதக்ஷிண நாளில் கண்ணப்பர் நினைவு அன்னம்பாலிப்பு |
| 6 | ஞாயிறு | 18 | |
| 7 | திங்கள் | 19 | |
| 8 | செவ்வாய் | 20 | |
| 9 | புதன் | 21 | |
| 10 | வியாழன் | 22 | |
| 11 | வெள்ளி | 23 | |
| 12 | சனி | 24 | |

| மாசி | கிழமை | பிப்ரவரி | 1968 பிப்ரவரி மீ<br>பிலவங்க — மாசி |
|---|---|---|---|
| 13 | ஞா யிறு | 25 | பிரதோஷம் - திருப்பனந்தாள் அருணசடேசுவரர் பிரதோஷக் கட்டளை<br>காஞ்சிபுரம் - திருவேகம்பப் பெருமானுக்குப் புனுகு தைலாபிஷேகம் |
| 14 | திங் கள் | 26 | மாசி மகாசிவராத்திரி: திருக்கோவலூர், திருவதிகை, திருமாகறல், திருவெண்ணெய்நல்லூர், திருப்பாதிரிப்புலியூர், சாயாவனம், திருவாப்பாடி, திருலோக்கி, ஆகிய தலங்களில் மகா சிவராத்திரிக் கட்டளை.<br>திருச்சேய்நலூர் சக்தீசுவரர், திருப்பனந்தாள் ஸ்ரீ அருணசடேசுவரர், திருலோக்கி ஸ்ரீ சுந்தரேசுவரர், திருவாப்பாடி ஸ்ரீ பாலுகந்தநாதர், தருமபுர ஆதீன ஞானபுரீசுவரர், – ஸ்ரீ தருமபுரீசுவரர் – சிவராத்திரிக் கட்டளை (R. C.)<br>இராமேசுவரத்தில் மகா சிவராத்திரிப் பெருவிழா 3-வது திருநாள் 'கந்தமாதனவெற்பு' மண்டகப்படியில் சுவாமி சீர்பாதம் வகையரு புளியன்னம் தயிரன்னம்.<br>மதுரையில் திருமுறை விழா. |
| 15 | செவ் வாய் | 27 | ● அமாவாசை<br>திருவாப்பாடி மாசி அமாவாசைக் கட்டளை ( R. C. ) |
| 16 | புதன் | 28 | |
| 17 | வியா ழன் | 29 | |

| மாசி | கிழமை | மார்ச்சு | 1968 மார்ச்சு மீ<br>பிலவங்க ஹூ மாசி – பங்குனி |
|---|---|---|---|
| 18 | வெள்ளி | 1 | |
| 19 | சனி | 2 | |
| 20 | ஞாயிறு | 3 | |
| 21 | திங்கள் | 4 | |
| 22 | செவ்வாய் | 5 | * கிருத்திகை வேளூர் ஸ்ரீ முத்துக்குமாரசுவாமி சந்தனுபிஷேகமும் திருமஞ்சனப் பரிசும். |
| 23 | புதன் | 6 | |
| 24 | வியாழன் | 7 | |
| 25 | வெள்ளி | 8 | மாசிமிருகசீரிடம் – காஞ்சிபுரத்தில் கச்சியப்ப சிவாசாரியார் நினைவு அன்னம் பாலிப்பு. |
| 26 | சனி | 9 | திருநள்ளாறு - மாசித் திருவாதிரை அன்னம் பாலிப்பு |
| 27 | ஞாயிறு | 10 | |

| தை | கிழமை | மார்ச்சு | 1968 மார்ச்சு மீ<br>பிலவங்க – மாசி – பங்குனி |
|---|---|---|---|
| 28 | திங்கள் | 11 | |
| 29 | செவ்வாய் | 12 | பிரதோஷம் – திருப்பனந்தாள் ஸ்ரீ அருண சடேசுவரர் பிரதோஷக் கட்டளை. |
| 30 | புதன் | 13 | மகாமக புண்யகாலம்: மாசிமகம் – கும்ப கோணத்தில் மாசிமக அன்னம் பாலிப்பு.<br>கும்பகோணம் ஆதி கும்பேசுவரர் கோயில் ரதோத்சவம் ஆள் & சுத்தாபிஷேகம்; கும்ப கோணம் ஸ்ரீ அபிமுகேசுவரர் கோயில் மக தீர்த்தவாரி மண்டகப்படி ஆள்; கும்பகோணம் ஸ்ரீ கௌதமேசுவரர் மகதீர்த்தவாரி மண்டகப் படி ( R. C. ) |
| | | | பங்குனி மீ<br>ஸ்ரீ காசியில்: 1) குமாரசாமி மடத்தில் கமலை ஞானப்பிரகாசர் நினைவு அன்னம்பாலிப்பு<br>2) காரைக்கால் அம்மையார் நினைவு அன்னம்பாலிப்பு<br>3) தண்டியடிகள் நினைவு அன்னம் பாலிப்பு<br>தண்ணீர்ப்பந்தல்: பங்குனி 1-ம் தேதி முதல் சுவாமிமலை, திருவாப்பாடி, திருபுவனம் ஆகிய தலங்களிலும், பங்குனி உத்திர முதல் ஸ்ரீவைகுண்டம், இராமேசுவரம், திருப்பரங் குன்றம், மணிக்குடி, திருப்பனந்தாள், தத்து வாஞ்சேரி, வைத்தீசுவரன் கோயில் ஆகிய ஊர்களிலும் தண்ணீர்ப்பந்தல் தருமம் தொடங்கி நடத்தப்பெறும்<br>சிதம்பரத்தில்: தில்லைவாழந்தணர்களுக்கு பங்குனி மாசத்தில் சிறப்பு அன்னம்பாலிப்பு ஒருநாள் |

| பங்குனி | கிழமை | மார்ச்சு | 1968 மார்ச்சு மீ<br>பிலவங்க ஹூ — பங்குனி |
|---|---|---|---|
| 1 | வியாழன் | 14 | ○ பௌர்ணமி |
| 2 | வெள்ளி | 15 | |
| 3 | சனி | 16 | |
| 4 | ஞாயிறு | 17 | |
| 5 | திங்கள் | 18 | பங்குனிச் சுவாதி - வடதிருவாலங்காட்டில் காரைக்காலம்மையார் நினைவு அன்னம் பாலிப்பு<br>பங்குனிச் சுவாதி - மதுரைச் சொக்கலிங்கம் சந்தன மெய்ப்பூச்சு |
| 6 | செவ்வாய் | 19 | |
| 7 | புதன் | 20 | |
| 8 | வியாழன் | 21 | |
| 9 | வெள்ளி | 22 | |

| பங்குனி | கிழமை | மார்ச்சு | 1968 மார்ச்சு மீ<br>பிலவங்க ஹூ - பங்குனி |
|---|---|---|---|
| 10 | சனி | 23 | |
| 11 | ஞா<br>யிறு | 24 | |
| 12 | திங்<br>கள் | 25 | |
| 13 | செவ்<br>வாய் | 26 | பிரதோஷம் - திருப்பனந்தாள் ஸ்ரீ அருண சடேசுவர சுவாமி பிரதோஷக் கட்டளை |
| 14 | புதன் | 27 | |
| 15 | வியா<br>ழன் | 28 | ● அமாவாசை |
| 16 | வெ<br>ள்ளி | 29 | தெலுங்கு வருஷப் பிறப்பு |
| 17 | சனி | 30 | ஸ்ரீலஸ்ரீ காசிவாசி சுவாமிநாத சுவாமிகள் நினைவுநாள் மகேசுவர பூசை |
| 18 | ஞா<br>யிறு | 31 | காஞ்சிபுரம் - திருவேகம்பப் பெருமானுக்குப் புனுகு தைலாபிஷேகம் |

| பங்குனி | கிழமை | ஏப்ரல் | 1968 ஏப்பிரல் மீ<br>பிலவங்க பங்குனி – கீலக சித்திரை |
|---|---|---|---|
| 19 | திங்கள் | 1 | |
| 20 | செவ்வாய் | 2 | • கிருத்திகை<br>வேலூர் ஸ்ரீ முத்துக்குமாரசுவாமி சந்தனுபிஷேகமும் திருமஞ்சனப்பரிசும் |
| 21 | புதன் | 3 | திருப்பனந்தாள் ஸ்ரீ வீரியம்மன் கோயில் பங்குனி உத்திரப் பெருவிழாத் தொடக்கம் |
| 22 | வியாழன் | 4 | |
| 23 | வெள்ளி | 5 | |
| 24 | சனி | 6 | |
| 25 | ஞாயிறு | 7 | ஸ்ரீராமநவமி |
| 26 | திங்கள் | 8 | |
| 27 | செவ்வாய் | 9 | |
| 28 | புதன் | 10 | பிரதோஷம் திருப்பனந்தாள் ஸ்ரீ அருணசடேசுவரர் பிரதோஷக் கட்டளை |
| 29 | வியாழன் | 11 | பங்குனி உத்திரம் - திருவாரூரில் திருமுறை விழா (R. C.) |
| 30 | வெள்ளி | 12 | ○ பௌர்ணமி |

முற்றும்